

அவள் காலேஜ் தோழிகள்:—

## "இவளுக்கு என்ன அற்புதமான பற்கள்"

என்று வியந்தனர்





ஆனால் பல்வைத்தியர்:—

## "நீ இப்பற்களை எல்லாம் இழக்கவேண்டியதுதான்"

என்றார்

உங்கள் பற்கள் இப்பொழுது எவ்வளவு ஒழுங்காகவும் அழகுடையதாகவும் இருந்தாலும் ஈறு வியாதி ஏற்பட விட்டீர்களானால் அவைகளை இழக்கநேரிடும். பற்களை கவனிப்பது போலவே ஈறுகளையும் அவசியம் கவனிக்கவேண்டும். எஸ். ஆர். டூத்பேஸ்ட் உபயோகியுங்கள். ஈறுகளை உறுதியாகவும் ஆரோக்கியமாகவும் இருக்கச்செய்ய பல்வைத்தியர்கள் பயன்படுத்தும் ஸோடியம் ரிஸினோலியேட் இதில் அடங்கியுள்ளது. மேலும் எஸ். ஆர். டூத்பேஸ்ட் பற்களை சுத்தமாகவும், வெண்மையாகவும், பளபளப்பாகவும் இருக்கச்செய்கிறது.




உங்கள் பற்களைக்காப்பாற்ற
ஈறுகளை பாதுகாத்துக்கொள்ளுங்கள்

கிப்ஸ்

# எஸ். ஆர். டூத்பேஸ்ட்

GSR. 46-50-40 TM

# STAR of INDIA

## an outstanding name in the pencil world...

பிராண்டும் பென்ஸிலுக்கு அடிக்கடி உடையக்கூடிய முனையும் கூடிவிட்டால், கோபம் வருவதுடன் தெளிவான சிந்தனையும் போய்விடும். ஓர் அற்ப பென்ஸிலும் கூட அபாரமான சிந்தனைக்கு ஏதுவாகலாம். ஸ்டார் ஆப் இந்தியா பென்ஸில்கள் எழுதுவதில் இன்பத்தையும் உன்னத எண்ணங்களையும் உற்பத்தி செய்ய ஏதுவானவை.




**ஸ்டார் ஆப் இந்தியா**

பென்ஸில் என்றால் மிகவும் உயர்தரமான பென்ஸில் என்பதுதான் அர்த்தம்.

**. . MADRAS PENCIL FACTORY Madras.**

ADS. MRL

# இதய நோயா?

...என்ன செய்யவென்று கூறுவேன்



இவ்வுபாதைகள் அதி கொடூரமானவை என்று சாதி வேன். மிக அசாதாரணமாகவும், ஊணுக்குப் பின் வயிற்றில் அஜீரணம், உப்புச உணர்வுகளைத் தரும் அமிலத்தின் சேர்க்கையாலேயே இவ்வுபாதைகள் ஏற்படுகின்றன. விஷ அமிலங்களுக்கு மாற்று, எப்போதும்போல ஜீரண சக்தி யளிப்பது, என உலகறிந்த பிஸ்மாக் சிபார்சு செய்கிறேன். 3 நிமிஷத்தில் வலி இடைஞ்சலின்றி ஜீரணமாக உதவுகிறது. இன்றுபரீக்ஷியுங்கள்.

உங்களுக்கு வேண்டியது

**BISMAG**

எல்லா கெமிஸ்டு களிடமும் ஸ்டோர் களிலும் பவுடராக வும் மாத்திரையாக வும் கிடைக்கும்.

சோல் ஏஜண்டுகள் :

**ஜியாப்ரே மானர்ஸ் & கோ., லிட்.**

பம்பாய்-கல்கத்தா-மதராஸ்-லாகூர்

# புது வருஷ வாழ்த்துக்கள்

•

இப் புனித தினத்தில் எமது பாலிஸிதாரர் அனைவருக்கும் எமது மனப்பூர்வமான வாழ்த்துக்களை அளிப்பதுடன், வருஷ முழுவதிலும் அவர்களது வாழ்க்கை ஆரோக்யமும் சுபிட்சமும் நிறைந்து விளங்க இறைவனைப் பிரார்த்திக்கிறோம்.

•

## தி வான்கார்டு இன்ஷ்யூரன்ஸ் கம்பெனி லிமிடெட்

308-9, லிங்கிச்செட்டி தெரு
மதராஸ் - 1

•

H. D. ராஜா
ஜெனரல் மானேஜர்

# சந்திரலேகா

ஜெமினியின் அற்புதமான சிருஷ்டி



# கல்கி

## பொருளடக்கம்

மலர் 7 இதழ் 37 | ஏப்ரல் 11 | சர்வசித்து ஐ பங்குனி 29







எட்டயபுரம் பாரதி மண்டபத் திறப்பு விழா வரவேற்புக் கமிட்டி.
(குற்றாலத்தில் 3—3—48ல் நடந்த கூட்டம்.)



மலர் 7 | தமிழ்த் திருநாடு தன்னைப் பெற்ற தாயென்று கும்பிடடி பாப்பா —பாரதியார். | இதழ் 37

# என்ன சேதி?

## டாக்டர் சுப்பராயன் ராஜீநாமா

**ப**த்திரிகைகளுக்கு ஸ்ரீ ஏ. வைத்திநாதய்யர் விடுத்திருந்த அறிக்கைக்குப் பிறகு டாக்டர் சுப்பராயன் அவர்களுடைய ராஜீநாமாவைப் பலரும் எதிர்பார்த்தேயிருப்பார்கள். அந்த அறிக்கையில் கண்ட விஷயங்களை டாக்டர் சுப்பராயன் மறுக்க முடியாவிட்டால் அவர் ராஜீநாமாச் செய்தே தீரவேண்டிய நிலைமை ஏற்பட்டு விட்டது.

ஆயினும் டாக்டர் சுப்பராயனுடைய ராஜீநாமாச் செய்தி வெளியானபோது நமக்குப் பெரிதும் வருத்தம் உண்டாயிற்று. அவருடைய ராஜீநாமாவுக்குக் காரணமாயிருந்த சந்தர்ப்பங்களும் நமக்குத் துயரத்தை உண்டாக்கின.

**செ**ன்ற ஒரு வருஷமாக டாக்டர் சுப்பராயன் சென்னைச் சட்ட சபையில் மந்திரிசபையின் முகமாக இருந்து வந்தார். அவருடைய பேச்சுக்களும் அங்கத்தினரின் கேள்விகளுக்கு அவர் கூறிய பதில்களும் இப்போதுள்ள மிக மட்டமான சட்ட சபைக்கும் உயிர் கொடுத்து ஓரளவு மதிப்பை உண்டுபண்ணி வந்தன.

பிரதம மந்திரிக்காகவும் மற்ற மந்திரிகளுக்காகவும் டாக்டர் சுப்பராயனே பதில் சொல்லி வந்தார். துவேஷ மனப்பான்மை காட்டிய முஸ்லிம் லீக் அங்கத்தினர் சிலருக்கு அவர் காரசாரத்துடன் சுடச் சுடக் கொடுத்த பதில்கள் சப்புச் சவுக்கென்று நடந்து வந்த சட்ட சபை நடவடிக்கைகளின் நடுவே சற்றுக் குதூகலத்தை உண்டு பண்ணி வந்தன.

எனவே டாக்டர் சுப்பராயன் மந்திரி சபையிலிருந்து விலக நேர்ந்தது ஓமந்தூர் மந்திரி சபைக்கு ஒரு பெரிய நஷ்டம் என்பதில் ஐயமில்லை.

ஆனாலும் பிரதம மந்திரிக்கும் உள்நாட்டு மந்திரிக்கும் தகராறு முற்றி இவ்வளவு தூரத்துக்கு வந்த பிறகு,—அதாவது வேறு தலைவரைத் தேர்ந்தெடுக்கும் முயற்சியில் டாக்டர் சுப்பராயன் ஈடுபட்டு அது பகிரங்கமும் ஆன பிறகு,—மந்திரி சபையிலிருந்து அவர் விலகிக் கொள்வதைத் தவிர வேறு வழியில்லை. தேசம் தற்போதுள்ள நிலைமையில் மந்திரிகள் பூரண ஒற்றுமையுடன் வேலை செய்தாலே நிர்வாகத்தைத் திறம்பட நடத்துவது மிகப் பிரயாசையான காரியம். பிரதம மந்திரியும், முக்கியமான போலீஸ் இலாகாவை வைத்துக் கொண்டிருக்கும் மந்திரியும் தகராறு செய்து கொண்டேயிருந்தால், சர்க்கார் உத்தியோகஸ்தர்கள் அலட்சிய மனப்பான்மை கொள்ளத் தொடங்குவார்கள். சர்க்கார் நிர்வாகம் சர்வ குழப்பத்தில் முடியும்.

**டா**க்டர் சுப்பராயன் தமது இலாகாவில் பிரதமர் அடிக்கடி குறுக்கிட்டதாகவும் அதன் காரணமாகவே தாம் விலகிக் கொண்டதாகவும் தம் அறிக்கையில் கூறியுள்ளார். இந்தப் புகாருக்குப் பிரதம மந்திரி தமது கடமையையே தாம் செய்ததாகப் பதில் விடுத்திருக்கிறார். இந்த விவாதத்தில் உள்ள நியாய அநியாயங்களைப் பற்றி நாம் தீர்ப்புக் கூற முடியாது. ஏனெனில் இது சம்பந்தமாக எல்லா விவரங்களும் நமக்குத் தெரிதல் சாத்தியமில்லை. இந்த விஷயத்தை ஒரு பொது விவாதமாக்குவதும் தேச நன்மைக்கு உகந்ததாகாது. காங்கிரஸ் மேலோர் விசாரித்து முடிவு செய்யவேண்டிய விஷயம். குறையுள்ளவர்கள் காங்கிரஸ் மேலோருக்கு அப்பீல் செய்து கொள்வதுதான் உசிதமாகும். இருதரப்பாரும் பகிரங்க விவாதத்தில் இறங்காமலிருந்தால் மிக நன்றாயிருக்கும்.

டாக்டர் சுப்பராயனுடைய அறிவாற்றல்களுக்கும், நீண்ட நிர்வாக அநுபவத்துக்கும், நீடித்த தேச ஊழியத்துக்கும் ஏற்றவாறு அவர் இந்தியா தேசத்துக்குத் தொண்டு செய்யக்கூடிய பதவியும் சந்தர்ப்பமும் கூடிய சீக்கிரத்தில் ஏற்பட வேண்டுமென்று விரும்புகிறோம்.

# தற்கால ஜோஸ்யம்

- சாஸ்திரி












# திருப்தி அடையாதீர்!

தலைவரைப் பொறுக்கும் தேர்தலில் ஸ்ரீ டி. பிரகாசம் அவர்கள் போட்டிக்கு நின்று தோற்று, கனம் ஓமந்தூர் ரெட்டியாரின் கட்சி பெரும் வெற்றி பெற்றதில் ஓர் அபாயம் இருக்கிறது.

கட்சித் தேர்தலில் வெற்றி யடைந்து தங்களுடைய பதவிகளை ஊர்ஜிதம் செய்துகொண்டதோடு எல்லாக் காரியங்களும் நிறைவேறி விட்டதாக நமது மந்திரிமார்கள் எண்ணிக்கொண்டு விடலாம். எண்ணிக்கொண்டு தேசத்தின் நிர்வாகத்திலும் தேச மக்களின் நன்மையிலும் அலட்சியம் காட்டத் தொடங்கி விடலாம். அல்லது கட்சித் தேர்தலில் ஜயிப்பதற்காக அங்கத்தினர்களைத் தாஜா பண்ணி வோட்டுச் சேகரித்த களைப்பினால் இளைப்பாறத் தொடங்கலாம்; சிலர் கொஞ்சம் தூக்கமும் போட விரும்பலாம். இத்தகைய விளைவுகளைத்தான் ஓமந்தூர் வெற்றியில் உண்டாகக் கூடிய அபாயம் என்று குறிப்பிட்டோம்.

* * *

உண்மையில் நமது மந்திரிகள்,—ராஜினாமா செய்தவரைத் தவிர மிச்சமுள்ள மந்திரிகள்,—திருப்தி அடைந்திருப்பதற்குச் சிறிதும் காரணமில்லை. இரவு பகல் இடைவிடாமலும் தூக்கங்கூட இல்லாமலும் கவலைப்பட்டுக் காரியங்கள் செய்வதற்கு வேண்டிய காரணங்கள் இருக்கின்றன.

நாடெங்கும் மக்களைப் பலவிதத் தொல்லைகள் சூழ்ந்திருக்கின்றன. கஷ்டம் பொறுக்கமுடியாமல் ஜனங்கள் ஓலமிடும் குரல் நாலா பக்கமும் கேட்கின்றது. ''சுதந்திரம் வந்தும் நமது துன்பம் தீரவில்லையே?'' என்று எங்கே பார்த்தாலும் எல்லா வகுப்பு மக்களும் ஏங்கி நிற்கிறார்கள்.

சுயநலம் மிகுந்த கும்பல்கள் சில இருக்கத்தான் செய்கின்றன. ''தேசம் எந்தக் கேடு கெட்டால் என்ன? நம்முடைய காரியந்தான் பெரிது!'' என்று சிலர் கள்ள மார்க்கெட் வியாபாரத்தை நடத்திக்கொண்டு போகிறார்கள். வேறு சிலர் ஏழைத் தொழிலாளர்களைத் தூண்டி வேலை நிறுத்தம் செய்வித்து நாட்டின் க்ஷேமத்துக்கே உலை வைக்கிறார்கள்.

மற்றப் பெரும்பாலான மக்களோ, ''காங்கிரஸ் ஆட்சியில் கதிமோட்சம் பிறக்கும்; நமது கஷ்டகாலம் நீங்கும்'' என்று பொறுமையுடன் சகித்துக் கொண்டிருக்கிறார்கள்.

நமது மந்திரிமார்கள் திருப்தி யடைந்து ''நாம் வைத்ததே சட்டம்; நாம் நடத்துவதே திட்டம்'' என்று அசட்டையா யிருக்கத் தொடங்கினால், அதைக் காட்டிலும் பெரும் பிழை வேறு கிடையாது. மக்களின் பொறுமைக்கும் சகிப்புத் தன்மைக்கும் ஓர் அளவு உண்டு. ''காங்கிரஸ் மந்திர''த்தைச் சொல்லிக் கொண்டு அவர்கள் காலவரம்பு இல்லாமல் காத்துக் கொண்டிருப்பார்கள் என்று எதிர்பார்க்க முடியாது. அப்படி அவர்களைக் காத்திருக்கச் செய்வதும் பெரும் பாவம் ஆகும்.

ஒவ்வொரு இலாகாவிலும் செய்வதற்கு எத்தனையோ காரியங்கள் இருக்கின்றன. ஒவ்வொரு மந்திரியும் தம்முடைய இலாகாவைப் பற்றித் துரிதப் படுவதற்கு எத்தனையோ காரணங்கள் இருக்கின்றன.

உதாரணத்துக்குக் கல்வி இலாகாவைக் கொஞ்சம் எடுத்துக் கொண்டு பார்க்கலாம்.

* * *

கனம் டி. எஸ். அவிநாசிலிங்கம் கல்வி மந்திரியான பிறகு பல சிறந்த சீர்திருத்தங்களைச் செய்திருக்கிறார். நமது பள்ளிக்கூடங்களில் மாகாண மொழிகளுக்கு, அதாவது பிள்ளைகளின் தாய் மொழிகளுக்கு முக்கியத்தை அளித்திருக்கிறார். இது அவர் செய்திருக்கும் காரியங்களில் தலை சிறந்தது.

ஆசிரியர்களுக்கு ஓரளவு சம்பளங்களை உயர்த்திக் கொடுத்திருக்கிறார். மாகாண சர்க்காரின் வருமானம் பல விதங்களில் குறைவுபடும் நிலைமையில் இவ்வளவேனும் செய்ய முடிந்தது பெரிய காரியந்தான்.

இன்னும் சில சில்லறைச் சீர்திருத்தங்களும் அவர் செய்திருக்கிறார்.

எஸ்.எஸ்.எல்.சி. பரீட்சைக்குச் சில மாணவர்களை அனுப்பாமல் பள்ளிக்கூட அதிகாரிகளே நிறுத்தி வைக்கும் வழக்கத்தை ஒழித்தது அவர் கடைசியாகச் செய்திருக்கும் நல்ல காரியம்.

ஆனால் இவையெல்லாம் போதுமா? போதாது; போதவே போதாது. அவர் இன்னும் செய்ய வேண்டிய காரியங்கள் எத்தனையோ இருக்கின்றன.

1. மாகாண மந்திரி சபை ஏற்பட்டு இரண்டு வருஷம் ஆகிறது. இந்தியா சுதந்திரம் அடைந்து எட்டு மாதம் ஆகிறது. ஆயினும் நமது பள்ளிக்கூடங்களில் இன்னமும் மகானுபாவர் மெக்காலே துரையின் ஆவி சுற்றிச் சுழன்று வந்து கொண்டிருக்கிறது.

பிரிட்டிஷ் சாம்ராஜ்யத்துக்குப் பக்தியுடன் ஊழியம் செய்யக்கூடிய குமாஸ்தாக்களைத் தயாரிப்பதே மெக்காலே பிரபு இந்நாட்டில் ஏற்படுத்திய கல்வி முறையின் நோக்கம்.

அந்த நோக்கத்தைக் கொண்ட கல்வி முறை இன்னும் இந்நாட்டில் அமுலில் இருந்து வருகிறது.

நமது சின்னஞ் சிறு குழந்தைகள் இன்னமும் எட்டாவது ஹென்ரி அரசனின் எட்டு மனைவிகளின் பெயர்களை நெட்டுருச் செய்து கொண்டிருக்கிறார்கள். நார்த்தம்பர்லாண்டில் டிசம்பர் மாதத்தில் எத்தனை அங்குலம் மழை பெய்கிறது என்று மண்டையை வறட்டிக் கொள்கிறார்கள். இங்கிலாந்தின் கல்லறைகளில் சமாதிகளுக்கு நிழல் தரும் Yew (இயூ) மரம் எப்படியிருக்கும், அது எந்த மாதத்தில் பூக்கும் என்று அவர்கள் பரீட்சையில் பதில் எழுதவேண்டியிருக்கிறது.

இந்த முட்டாள்தனங்கள் எல்லாம், நமது குழந்தைகளின் அறிவைப் பாழாக்கும் கொலைபாதகக் கொடுமைகள் எல்லாம், இன்னும் நமது கல்வி முறையிலிருந்து ஒழிந்த பாடில்லை.

புகழ்பெற்ற 1942-ம் ஆண்டில் ஹைஸ்கூலின் பாடதிட்டங்களைப் புதிய விதமாகத் திருத்தி அமைத்தார்கள். இந்த 1942-ம் வருஷக் ''கரி குலம்'' அமைத்தவர்கள் கம்ஸனுடைய வம்சத்திலே பிறந்த 'குழந்தைக் கொல்லி'களோ என்று கருதும்படியாகப் பாடத்திட்டங்கள் அமைந்திருக்கின்றன.

ஹைஸ்கூல் பாடத்திட்டத்தை மாற்றுவதற்காகச் சென்ற வருஷத்தில் கனம் கல்வி மந்திரி ஒரு கமிட்டியை நியமித்தார். அந்தக் கமிட்டியார் தங்கள் அறிக்கையின் முன்னுரையில், ''மெக்காலே ஏற்படுத்திய கல்வி முறையில் ஒரு குறைவும் இல்லை; அதுவே இந்தியாவுக்குத் தகுந்த மேலான கல்வி முறை!'' என்று எழுதியிருக்கிறார்கள். இதற்குப் பிறகு தங்களுடைய அருமையான யோசனைகளைச் சொல்லியிருக்கிறார்கள்.

இப்பேர்ப்பட்ட பொறுக்கி எடுத்த 'பிரகஸ்பதி'களிடம் அதாவது மடசாம்பிராணிகளிடம் கல்வியைச் சீர்திருத்துவதற்கு யோசனை கேட்ட கல்வி மந்திரியை நாம் பாராட்டுவதற்கில்லை.

பொதுவாக, கல்வி இலாகாவின் பழைய பெருச்சாளிகள் நமது கல்வி மந்திரியைப் பயமுறுத்தி மூலையில் உட்கார்த்திவைக்க முயல்வதாக ஒரு வதந்தி ஏற்பட்டிருக்கிறது. அவர்கள் சொல்கிறபடி இவர் ஆடுவதாகவும், அவர்கள் காட்டிய இடத்தில் இவர் கையெழுத்துப் போடுகிறார் என்றும் வதந்தி பரவியிருக்கிறது. இதற்குக் கல்வி மந்திரி இடங்கொடுக்கக்கூடாது. பழைய கல்வி முறையில் ஊறித் தலை வழுக்கை விழுந்து போனவர்களை இவர் மூலையில் உட்கார வைத்துவிட்டு, கல்வி இலாகா சம்பந்தமற்ற அறிவாளிகளைக் கொண்டு நமது கல்வி முறையை உடனே சீர்திருத்த வேண்டும்.

இப்போது நமது குழந்தைகளின் இளம் மூளைகளில் அநாவசியமாகத் திணித்து உபத்திரவப் படுத்திக் கொண்டு வரும் உபயோகமற்ற பாடங்களில் ஒரு பாதியை எடுத்துவிட்டாலே பெரிய கல்வி சீர்திருத்தமாகும்!

2. காந்தி மகாத்மாவினால் தொடங்கப்பட்ட அருமையான நிர்மாணத் திட்டங்களில் ஆதாரக் கல்வித்திட்டம் மிகவும் முக்கியமானது. சிறந்த அறிஞர்கள் பலர் தீர்க்காலோசனையின் பேரில் அத்திட்டத்தைக் காட்டிலும் சிறந்த கல்வித் திட்டம் வேறில்லையென்று சொல்லியிருக்கிறார்கள்.

கல்வி மந்திரி ஸ்ரீ அவிநாசிலிங்கம் காந்திஜியின் பரமபக்த கோஷ்டியில் ஒருவராயிருந்தும் இம்மாகாணத்தில் ஆதாரக் கல்வித் திட்டம் நன்கு அபிவிருத்தியடையவில்லை.

இங்கே ஒன்றும், அங்கே ஒன்றுமாக உற்சாகிகள் சிலர் ஆதாரக் கல்விப் பள்ளிக்கூடங்கள் நடத்துகிறார்கள். அவற்றுக்குச் சர்க்காரின் ஆதரவு போதிய அளவு இல்லை.

இது மிகவும் அதிருப்திப்பட வேண்டிய நிலைமையாகும்.

3. உலகத்திலே எழுதப் படிக்கத் தெரிந்தவர்களின் விகிதாசாரம் மிகக் குறைவாயிருப்பது இந்தியா தேசம். இதற்குக் காரணம் கல்வி மந்திரி அவிநாசிலிங்கம் என்று நாம் சொல்லவில்லை. பழைய பிரிட்டிஷ் ஆட்சிதான் காரணம். ஆனால் சீக்கிரத்தில் இதை மக்கள் மறந்து விடுவார்கள். ''காங்கிரஸ் ஆட்சியிலும் அதே நிலைமை தானே!'' என்று சொல்லுவார்கள். ஆரம்பப் பள்ளிக் கூடத்துக்குப் போகும் வயதுள்ள குழந்தைகளில் இப்போது பாதிப் பேர்தான் பள்ளிக் கூடம் போகிறார்கள். பாக்கிப் பாதிப் பேரும் பள்ளிக்கூடம் போவதற்குரிய ஏற்பாடு உடனே செய்தாகவேண்டும்.

4. கல்வி இலாகாவின் நிர்வாகமும் இன்னும் முன்னைப் போலவேதான் இருக்கிறது. பல ஆரம்பப் பாடசாலைகளுக்கும் ஆதாரப் பள்ளிக்கூடங்களுக்கும் சென்ற எட்டு மாதமாகக் 'கிராண்ட்' வந்து சேரவில்லையென்று சொல்லப் படுகிறது. ஆசிரியர்கள் பட்டினி கிடந்து செத்துப் போய், பள்ளிக் கூடத்தையும் மூடித் தொலைத்த பிறகு, அப்புறம் என்ன 'கிராண்ட்' வந்து என்ன பிரயோஜனம்? இது ரொம்ப ரொம்ப அதிருப்திப்பட வேண்டிய நிலைமை யாகும்.

5. எல்லாக் குழந்தைகளுக்கும் ஆரம்பக் கல்வி அளித்து நாட்டிலிருந்து எழுத்தறியாமையைப் போக்குவது மிகவும் அவசியம். ஆனால் அதைக் காட்டிலும் மிகவும் முக்கியமானது,—சுதந்திர இந்தியாவின் பாதுகாப்புக்கும் முன்னேற்றத்துக்கும் அவசியமானது, — தகுதி வாய்ந்த இளைஞர்களை யெல்லாம் இயந்திரக் கலையில் பழக்குவதாகும்.

சென்னை மாகாணம் சிறந்த என்ஜினியர்களுக்குப் பெயர் போனது. நமது இளைஞர்களில் ஆயிரம், பதினாயிரம், லட்சம் என்ற கணக்கில் நல்ல என்ஜினியர்கள் ஆகக் கூடியவர்கள் இருக்கிறார்கள்.

லட்சக்கணக்கில் இல்லாவிட்டால் ஆயிரக் கணக்கிலாவது என்ஜினியர்களை நாம் உற்பத்தி செய்தாக வேண்டும். இல்லாதவரையில், இந்நாடு முன்னேற வழியில்லை.

இயந்திரக் கலை என்ஜினியர்கள், மின்சாரக் கலை என்ஜினியர்கள், பாலங் கட்டும் என்ஜினியர்கள், சாலை அமைக்கும் என்ஜினியர்கள், வீடு கட்டும் என்ஜினியர்கள், அணை போட்டு நீரைத் தேக்கும் என்ஜினியர்கள் — இவர்கள் எல்லாரும் இந்நாடு முன்னேறுவதற்கு அத்தியாவசிய மானவர்கள்.

வெறும் பி. ஏ. க்கள் இந்த நாட்டில் ஏராளமாக இருக்கிறார்கள்; தேவைக்கு அதிகமாகவே இருக்கிறார்கள். ஆயினும் ஆர்ட்ஸ் காலேஜுகள் புதிது புதிதாக மேளம், தாளம், டமாரத் துடன் ஏற்பட்டு வருகின்றன.

ஆனால் நம் தேசத்துக்கு அவசியம் வேண்டியவர்கள் என்ஜினியர்கள், ஓவர்ஸியர்கள், மேஸ்திரிகள், மெக்கானிக்குகள். இவர்களைத் தயாரிக்கும் என்ஜினியரிங் கலாசாலைகளும், பாலிடெக்னிக் கலாசாலைகளும் நாடெங்கும் ஏற்படவேண்டும். — இவற்றை ஏற்படுத்துவதற்குச் சர்க்கார் எந்தவித ஏற்பாடும் இதுவரையில் செய்ய வில்லை.

6. இப்போதுள்ள சென்னை மந்திரி சபையைப் பற்றிக் குறை சொல்கிறவர்களில் சிலர், இதை வகுப்புத்துவேஷ மந்திரி சபை என்று சொல்கிறார்கள். இன்னும் தெளிவாகச் சொன்னால் பிராமணத் துவேஷம் கொண்ட ஜஸ்டிஸ் கட்சி ஆட்கள்தான் காங்கிரஸ் பேரால் இந்த மந்திரி சபையை அமைத்து நடத்துவதாகச் சொல்கிறார்கள். இது முற்றும் பொய் என்று நாம் உறுதியாகச் சொல்ல முடியும். இப்படிப் பட்ட பிரசாரம் செய்வது மிகக் கேடானது என்றும் நாம் கருதுகிறோம்.

ஆனாலும் ஒரு விஷயத்தைக் குறிப்பிட வேண்டும். ஓமந்தூர் ரெட்டியார் மந்திரி சபையைப் பற்றி வகுப்புத் துவேஷ மந்திரி சபை என்று பிரசாரம் செய்ய ஓரளவு இடங் கொடுப்பது கல்வி இலாகாவே யாகும். கலாசாலைகளில் பிள்ளைகளைச் சேர்த்துக் கொள்வதற்குச் சாதி விகிதாசாரம் நிர்ணயித்துச் சேர்ப்பது என்ற ஏற்பாடு அந்த அபக்கியாதிக்கு இடந் தருகிறது.

மேற்படி ஏற்பாட்டுக்கு ஓமந்தூர் மந்திரி சபையும் பொறுப்பில்லை; கல்வி மந்திரி அவிநாசிலிங்கமும் பொறுப்பில்லை. ஜஸ்டிஸ் கட்சி பரம்பரையில் அந்த முறை ஆரம்பமாகி அட்வைஸரி கவர்ன்மெண்டின் ஆட்சிவரையில் நடந்திருப்பது. என்ஜினியரிங் கலாசாலை சம்பந்தப்பட்ட வரையில், சாதிவாரியாக மட்டுமின்றி ஜில்லாவாரியாகத் தேர்தெடுக்கும் முறையும் கையாளப்பட்டு வந்திருக்கிறது.

ஸ்ரீ பிரகாசம்காருவின் ஒரு வருஷ ஆட்சியின்போது 100-க்கு 20 விதம் தகுதிக்கும், பாக்கி 80 விதம் தகுதியின்

மைக்கும் மாணவர்களைச் சேர்ப்பது என்ற அழகான ஏற்பாடு அமுலுக்கு வந்தது!

ஓமந்தூர் மந்திரி சபையில் அந்த 100-க்கு 20 விகிதத்தை எடுத்து விட்டார்கள். இந்த மந்திரி சபையைச் சாதித் துவேஷம் கொண்ட சபை என்று தூற்றுவதற்கு உபயோகப்படும் விஷயம் முக்கியமாக இது ஒன்றுதான்.

தகுதிக்கு 20, தகுதியின்மைக்கு 80 என்று பிரித்துப் பொறுக்கும் முறை சரியானது என்று நாம் சொல்ல மாட்டோம்; படு முட்டாள்தனமானது என்றும் சொல்லுவோம்.

தகுதியை முன்னிட்டுத்தான் 100க்கு 100 ஸ்தானமும் விநியோகிக்கப்பட வேண்டும். ஆனால் தகுதி என்பது என்ன? பள்ளிக்கூடப் பரீட்சைமார்க்குகளிலிருந்து மட்டும் ஒருவனுடைய தகுதியை நிர்ணயிக்க முடியுமா?

பரீட்சையே ஒரு முட்டாள்தனம். பரீட்சைத் தாள்களைத் திருத்தும் ஆசிரியர்கள் அவ்வப்போது தங்கள் மனோநிலையை முன்னிட்டு மார்க்குப் போடுகிறார்கள். பரீட்சையில் எழுதும் மாணக்கனுக்கு அன்றையதினம் தலைவலி அல்லது அஜீரணம் அல்லது மனக்கவலை இருந்தால் பரீட்சை சரியாக எழுத மாட்டான். இதைக் கொண்டா ஒருவனுடைய தகுதியையும் தலைவிதியையும் நிர்ணயிப்பது?

செய்யவேண்டியது என்னவென்று நாம் சொல்கிறோம். எந்த மாணக்கன் எந்தக் கலாசாலையில் சேர விரும்பினாலும் அதற்கு இடம் செய்து கொடுக்க வேண்டும். இதைச் செய்யாத வரையில் ஒரு அரசாங்கம் தன்னுடைய பிரதம கடமையைச் செய்ததாகச் சொல்லமுடியாது.

முக்கியமாக, என்ஜினியரிங் கலாசாலை விஷயத்தில் இது அவசியம் செய்யவேண்டிய காரியம். ஏனெனில் தேசத்தின் முன்னேற்றத்துக்கு என்ஜினியர்கள், — ஏராளமான என்ஜினியர்கள், —அவசியம் தேவை.

நமது நாட்டுக் கல்வி முறையே பெரிய மோசடியாயிருப்பது போல், என்ஜினியரிங் கல்விமுறையும் இப்போது மோசடியாயிருந்து வருகிறது.

**யுத்த காலத்தில் இதே கிண்டி என்ஜினியரிங் கலாசாலையில் மூன்று வருஷத்திற்குள் என்ஜினியரிங் பயிற்சி அளித்து மாணக்கர்களுக்குப் பட்டமும் கொடுத்தார்கள். யுத்தம் முடிந்ததும் பழையபடி ஐந்து வருஷம் படிக்கவேண்டும் என்கிறார்கள்.**

**இது எவ்வளவு அயோக்யத்தனமான மோசடி வியாபாரம்?**

**யுத்த காலத்திற்கு மூன்று வருஷ என்ஜினியரிங் பயிற்சி போதும் என்றால், மற்றக் காலத்துக்கு ஏன் போதாது?**

என்ஜினியரிங் கல்வியை மூன்று வருஷமாக்கினால், கிண்டி கலாசாலையில் இப்போதைவிட இரண்டு மடங்கு மாணக்கர்கள் படித்துத் தேறுவார்கள்.

கிண்டி என்ஜினியரிங் கலாசாலையைப் போல் சென்னை மாகாணத்தில் குறைந்த பட்சம் இன்னும் ஐந்து கலாசாலைகள் வேண்டும்.

ஐந்து கோடி ரூபாய் சென்னை சர்க்கார் கடன் வாங்கி அதைக்கொண்டு ஐந்து முதல் தர என்ஜினியரிங் அல்லது பாலி டெக்னிக் கலாசாலைகள் ஏற்படுத்தினால் இம் மாகாணத்துக்கு மகத்தான சேவை செய்யலாம்.

அந்தக் காலம் வருகிற வரையில் இளந் தலைமுறையைச் சேர்ந்த பிள்ளைகளின் மனதில் தகுதி—தகுதியின்மை, சாதி வேற்றுமை, வகுப்புத் துவேஷம் ஆகியவற்றைப் புகுத்தாமல் கலாசாலைகளில் மாணவர்களைச் சேர்த்துக் கொள்ள ஒரு தர்ம நியாயமான முறையைக் கையாள வேண்டும்.

உதாரணமாக, நமது பிரதம நீதிபதி ராஜமன்னார், ஸ்ரீ டி. ஆர். வெங்கட்ராம சாஸ்திரி, என்ஜினியரிங் கலாசாலை பிரின்ஸ்பால் அடங்கிய ஒரு கமிட்டியை நியமித்து மாணக்கர்களைத் தேர்ந்தெடுக்கச் சொன்னால் யாரும் புகார் சொல்ல இடமிராது.

7. சென்னை மாகாணத்தில் சென்னைச் சர்வ கலாசாலை, ஆந்திர சர்வ கலாசாலை, அண்ணாமலை சர்வ கலாசாலை ஆகிய மூன்று சர்வ கலாசாலைகள் இருக்கின்றன. இவற்றுள் ஆந்திர சர்வகலாசாலை கூடிய வரைக்கும் முன்னேற்றமான முறையில் நடைபெற்று வருகிறது. இதற்குக் காரணம் ஆந்திர சர்வகலாசாலையானது டாக்டர் சி. ஆர். ரெட்டியை உப அத்தியட்சகராகப் பெற்றிருப்பதுதான்.

சென்னைச் சர்வ கலாசாலையின் பிற்போக்குத் தன்மையைக் குறித்து வைஸ் சான்ஸலர் டாக்டர் ஏ. லக்ஷ்மணசாமி முதலியார் அன்றொரு நாள் பகிரங்கமாகப் பெருமையடித்துக் கொண்

டார்! டாக்டர் லக்ஷ்மணசாமி முதலியார் சிறந்த அறிவாளி, படிப்பாளி என்பதை யாரும் மறுக்கமாட்டார்கள். ஆனால் அவர் இன்னமும் இடுப்பில் வேஷ்டி உடுத்திக் கொள்ளக் கற்றுக் கொள்ளாதவர்; கால்சட்டை, கழுத்துச் சுருக்கு நாகரிகத்தில் ஆழ்ந்து மூழ்கியவர். ஆங்கில பாஷை, ஆங்கில நாகரிகம், ஆங்கில நடை உடை பாவனை—இவற்றையே மோட்ச சாதனங்களாகக் கருதுகிறவர். இப்படிப் பட்டவரை வைஸ் சான்ஸலராகக் கொண்ட சென்னைச் சர்வ கலாசாலை நாளுக்கு நாள் பிற்போக்கில் பிரக்யாதி அடைந்து வருவதில் வியப்பில்லை.

அண்ணாமலைச் சர்வ கலாசாலையோ, "**சர்வ கலாட்டா சாலை**" என்று ஏற்கெனவே அடைந்திருக்கும் பட்டத்துக்கு மேலும் மேலும் தகுதி பெற்றுக் கொண்டு வருகிறது.

சென்ற அக்டோபர் 2உ காந்தி மகாத்மா பிறந்த புனித தினத்தில் அங்கு நடந்த 'கலாட்டா'வைப் பற்றி இத்தனை காலங் கழித்து வெளியாகியிருக்கும் அறிக்கையைப் படிக்கும் போது வாய் காக்கிறது. மாணாக்கர்களுக்குள்ளே கட்சிகள், அடிதடிகள், இந்திய தேசக் கொடிக்குப் பதிலாகக் கறுப்புக்கொடி ஏற்றுதல், அதை இறக்குதல், இதைப்பற்றி மாஜிஸ்ட்ரேட் கோர்ட்டில் கேஸ்கள்! ...... "கலைத் தெய்வமே! இத்தகைய கலாட்டா சாலையிலும் நீ குடியிருப்பாயோ?" என்று கேட்கத் தோன்றுகிறது.

வைஸ் சான்ஸலர் ரத்தினசாமி அவர்கள் அறிஞராகவும் கல்விமானாகவும் இருக்கலாம். ஆனால் அவர் தேசிய இயக்கத்துக்கும் இந்தியாவின் சுதந்திரத்துக்கும் பெரும் விரோதியாயிருந்தார் என்பதை மறுக்கமுடியாது.

அறிவாற்றலோடு தேசிய மனப்பான்மையும் தேசபக்தியும் கொண்ட வைஸ்சான்ஸலர்கள் வந்தால்தான் இரண்டு சர்வ கலாசாலைகளும் உருப்படும் என்பதில் சந்தேகம் இல்லை.

8. அகில இந்திய அரசாங்க பாஷையாகிவிட்ட ஹிந்தியைத் தமிழ் நாட்டில் எல்லா இளைஞர்களும் கற்றுக் கொள்வதற்கு இன்னும் வசதி செய்யப்படவில்லை. இது பெருங்குறை.

சீப் ஜஸ்டிஸ் ராஜமன்னார் அவர்கள் சில நாளைக்கு முன்னால் "சம்ஸ்கிருதத்தை நமது பாடசாலைகளில் கட்டாயமாக்க வேண்டும்" என்று சொன்னார். இதை நாம் ஒப்புக்கொள்ளவில்லை; நடவாத காரியம் என்றே சொல்லிவிடலாம். ஆனாலும் நமது கல்வி ஸ்தாபனங்களில் சம்ஸ்கிருதத்துக்கு இப்போதுள்ள அந்தஸ்தையும் கற்கும் வசதியையும் குறைக்க வேண்டியதில்லை. இதைப்பற்றிச் சமீபத்தில் சில சம்ஸ்கிருத பக்தர்கள் கூட்டம் போட்டுப் பேசினார்கள். இத்தகைய புகார்களுக்கு இடங் கொடுத்து வீணாக நாட்டில் பாஷைச் சண்டையை வளர்க்கக் கூடாது.

9. ஆர்ட் கலாசாலைகளில் இடம் இல்லாத தொல்லையைக் குறைப்பதற்கு சர்தார் ஏ. வேதரத்தினம் ஒரு நல்ல யோசனை சொல்லியிருக்கிறார்.

சென்னையில் தனிப்படப் படித்த மாணாக்கர்கள் காசி சர்வகலாசாலைப் பரீட்சைகளுக்கு எழுதிப் பட்டம் பெறுகிறார்கள். அத்தகைய வசதியை சென்னைச் சர்வகலாசாலை ஏன் தரக்கூடாது? "பிற்போக்குச் சர்வகலாசாலை" என்னும் பட்டத்துக்குப் பங்கம் வரக்கூடாது என்பதைத் தவிர வேறு காரணம் தெரியவில்லை. காலேஜுக்கு இத்தனை நாள் வந்து இவ்வளவு சம்பளம் அழுதிருந்தால்தான் பரீட்சையில் எழுதலாம் என்று ஏன் நிர்ப்பந்திக்க வேண்டும்? "காலேஜில் இடங் கிடையாது; சேர்த்துக்கொள்ள மாட்டோம். வீட்டில் படித்துக் கொண்டு வந்து பரீட்சை எழுதவும் கூடாது!" என்று சொல்வது எவ்வளவு கல் நெஞ்சத்தனம்! வீட்டில் சுய முயற்சியினாலோ தக்க ஆசிரியர் மூலமாகவோ படித்துக் கொண்டு வந்து ஒரு மாணவன் பரீட்சை எழுதிவிட்டால், அதனால் யாருடைய அப்பன் வீட்டுச் சொத்து பறி போய்விடும்? அல்லது யாருக்கு என்ன நஷ்டம் ஏற்பட்டு விடும்?

இவ்வாறு கல்வி இலாகாவில் சீர்திருத்தம் செய்ய வேண்டிய காரியங்கள் எவ்வளவோ இருக்கின்றன. ஆகையால் கல்வி மந்திரி திருப்தி அடைந்து சும்மா இருக்கக் காரணம் இல்லை. இப்படியே ஒவ்வொரு இலாகாவிலும் இடைவிடாத முன்னேற்ற முயற்சிகளுக்கு இடம் இருக்கிறது. எந்த மந்திரியும் திருப்தியடைந்திருக்கக் காரணம் இல்லை.

தலைவர் தேர்தலில் அடைந்த வெற்றியோடு திருப்தியடைந்துவிட வேண்டாம் என்று மந்திரிகள் பன்னிருவரையும் கேட்டுக் கொள்கிறோம்.

# காந்தி மகாத்மாவின் உள்ளங் கவர்ந்த

காந்தி மகான் அவதரித்த கத்தியவார் பிரதேசத்தில், ஜுனாகாத் சமஸ்தானத்தில் முந்நூறு வருஷங்களுக்கு முன்னால் நரஸிம்ம மேதா என்று ஒரு பெரியவர் இருந்தார். அவர் பரம பக்தர்; அடியார்க்கு அடியார். ஸ்ரீ ராமானுஜரைப் போல் ஏழைகளையும் தீனர்களையும் எண்ணி அவர் உள்ளம் உருகியது. அவர்களுக்கு ஹரி நாமத்தை உபதேசித்துக் கடைத்தேற்ற விரும்பினார். தீண்டாதார் சேரிகளுக்குச் சென்று பஜனை செய்தார். அவர்களுக்குப் பகவானுடைய நாமத்தை உபதேசித்தார்.

இதெல்லாம் மேற் குலத்தார் என்று சொல்லப்பட்டவர்களுக்குப் பிடிக்கவில்லை. பெரும்பாலும் பக்தர்களின் கதையெல்லாம் இதுதானே? 'உயர்ந்த' சாதிக்காரர்கள் நரஸிம்ம மேதாவைத் தூஷித்தார்கள்; கண்டித்தார்கள்; வைஷ்ணவ கோஷ்டியிலிருந்தே அவரைத் தள்ளி விட்டார்கள்.

அதற்காக அந்தப் பக்த சிரோமணி வருத்தப்படவும் இல்லை; கோபம் அடையவும் இல்லை. "உண்மையான வைஷ்ணவன் யார்?" என்று ஒரு கேள்வி கேட்டுக் கொண்டு அதற்கு ஓர் அற்புத கீதத்திலே பதிலும் சொன்னார். அதுதான் "வைஷ்ணவ ஜனதோ" என்று தொடங்கும் கீதம்.

காந்தி மகாத்மா தம் இளம் பிராயத்தில் மேற்படி கீதத்தைக் கேட்கும்படி நேர்ந்தது. அப்போதே அது அவர் சிந்தையில் குடிகொண்டது. நாளாக ஆக அதன் பொருள் நன்கு விளங்கிற்று. அந்தப் பாட்டில் அடங்கிய கருத்துகளுக் கிணங்கக் காந்திஜி தம் வாழ்க்கையைச் செப்பனிடத் தொடங்கினார். அதன் பயனாக அவர் உலகம் போற்றும் மகாபுருஷர் ஆனார்.

அத்தகைய ஜீவசக்தி வாய்ந்த கீதத்தைப் பாடிய பரம பக்தர் நரஸிம்ம மேதாவின் திருவுருவப் படம் நமது இந்த வாரக் 'கல்கி' இதழ் அட்டைக்கு மகிமை அளிக்கிறது.

காந்தி மகாத்மாவுக்கு மிகப் பிரியமான "வைஷ்ணவ ஜனதோ" கீதம், ஸ்ரீமதி எம். எஸ். சுப்புலக்ஷ்மி அவர்களால் பாடப்பட்டு எச். எம். வி. 14408-ம் நெம்பர் இசைத் தட்டில் வெளியாகி யிருக்கிறது. கருத்துக்குத் தகுந்த இனிமையும் உருக்கமும் வாய்ந்த புதிய வர்ண மெட்டில் அக்ஷர லோபம் இன்றிச் சுத்தமாக உச்சரித்து ஸ்ரீமதி எம். எஸ். சுப்புலக்ஷ்மி பாடியிருக்கிறார். ஒரு தடவை கேட்டால் மறுபடியும் மறக்க முடியாதபடி நனவிலும் கனவிலும் சுற்றிச் சுழலும் பாட்டு இது.

இதன் மற்றொரு பக்கத்தில் காந்தி மகாத்மாவின் பிரார்த்தனைகளில் சர்வ ஜனங்களாலும் பாடப்பட்டு வந்த "ராமதுன்" பதிவு செய்யப்பட் டிருக்கிறது. ஸ்ரீமதி எம். எஸ். சுப்புலக்ஷ்மி அவர்களின் குரலோடு மற்றும் பல குரல்களும் சேர்ந்து கோஷ்டி கானமாக அமைந்திருக்கிறது.

காந்தி மகான் அமரத்வம் அடைவதற்குச் சரியாக ஒரு மாதத்திற்கு முன்னாலேதான் ஸ்ரீமதி எம். எஸ். புது டில்லியில் மகாத்மா காந்தியின் பிரார்த்தனையில், அவருடைய ஆக்ஞைப்படி பக்தி கீதங்களும் 'ராமதுன்' பஜனையும் பாடினார். ஆகையால், காந்தி மகான் அமரரான சில காலத்துக்கெல்லாம் எடுக்கப்பட்ட இந்த இசைத் தட்டின் ஒவ்வொரு வரியிலும் சோகம் தொனித்து உள்ளம் உருகுகிறது.

'ராம துன்' கோஷ்டி பஜனையைக் கேட்கும்போது, புது டில்லியில் ஜனவரி 31-ம் தேதி மகாத்மாவின் புனிதத் திருமேனியைப் புஷ்பக் குவியலால் மறைத்து ராஜகாட் மயானத்துக்குக் கொண்டுபோன ஊர்வலத்தோடு நாமும் போகிறோம். பிப்ரவரி 12-ம் தேதி புது டில்லியி லிருந்து அவருடைய புனித அஸ்தி கலசத்தோடு ஸ்பெஷல் ரயிலில் ஏறிப் பிரயாகை சென்று கங்கை யமுனை சங்கமத்தில் அஸ்தியைக் கரைக்கும் காட்சியும் மனக்கண் முன் வருகிறது. இந்த நீண்ட யாத்திரையின்போது கோடி கோடி மக்கள் "தேசத்தின் தந்தையைப் பிரிந்தோமே! ஏ, ராமா! இதுவும் உன் கருணையா?" என்று அலறி ஓலமிடும் சத்தமும் நெஞ்சின் அடிவாரத்திலிருந்து பொங்கி வருகிற விம்மலும் கேட்டுக் கொண்டே யிருக்கிறது.

காந்தி மகானுடைய ஜீவியத்துக்கும் இறுதி யாத்திரைக்கும் இந்த இசைத் தட்டு இணையற்ற ஞாபகச் சின்னமாகும்.

# ‘வைஷ்ணவ ஜனதோ’ கீதம்

वैष्णव जन तो तेने कहीअे जे पीड पराअी जाणे रे;
परदुःखे अुपकार करे तोये, मन अभिमान न आणे रे. ध्रु०

सकळ लोकमां सहुने वंदे, निंदा न करे केनी रे;
वाच काछ मन निश्चळ राखे, धन धन जननी तेनी रे. १

समदृष्टि ने तृष्णा त्यागी, परस्त्री जेने मात रे;
जिह्वा थकी असत्य न बोले, परधन नव झाले हाथ रे. २

मोह माया व्यापे नहि जेने, दृढ वैराग्य जेना मनमां रे;
रामनामशुं ताळी लागी, सकळ तीरथ तेना तनमां रे. ३

वणलोभी ने कपटरहित छे, काम क्रोध निवार्या रे;
भणे **नरसैंयो** तेनुं दरसन करतां, कुळ अेकोतेर तार्या रे. ४

“வைஷ்ணவன் என்போன் யாவன் என்று கேட்டால், இதோ சொல்லுகிறேன், கேளுங்கள் :

“எவன் பிறருடைய துக்கத்தைத் தன்னுடைய துக்கமாகக் கருதுவானோ, கஷ்டப்படுகிறவர்களுக்கு உதவி புரிந்துவிட்டு அதைப் பற்றிக் கர்வம் கொள்ளாம லிருப்பானோ, அவனே உண்மையான வைஷ்ணவன்.

“எவன் உலகில் பிறந்தோர் அனைவரையும் வணங்குவானோ, மனோ வாக்கு காயங்களைப் பரிசுத்தமாக வைத்துக் கொண்டிருப்பானோ, அப்படிப்பட்டவனுடைய அன்னையே தன்யை யாவாள்.

“எவன் (விரோதியையும் நண்பனையும்) சம திருஷ்டியுடன் நோக்குவானோ, எவன் ஆசையைத் தியாகம் செய்தவனோ, எவன் பரஸ்திரீயைத் தன் தாயாகக் கருதுவானோ, எவன் தன் நாவால் ஒருபோதும் பொய் பேசமாட்டானோ, எவன் பிறருடைய பொருளைக் கையால் தொடவும் மாட்டானோ, அவனே வைஷ்ணவன் ஆவான்.

“எவனை மோகமும் மாயையும் அண்டாதோ, எவனுடைய மனதில் திட வைராக்கியம் குடிகொண்டிருக்குமோ, எவன் ஸ்ரீராம நாமத்தைக் கேட்டதுமே அதில் ஆழ்ந்து மெய்ம்மறந்து விடுவானோ, அவனுடைய சரீரம் எல்லாப் புண்ணிய தீர்த்தங்களுக்கும் இருப்பிடமாகும்.

“எவன் லோபமும் கபடமு மில்லாதவனோ, எவன் காமத்தையும் குரோதத்தையும் விட்டொழித்தவனோ, அப்படிப்பட்ட உத்தமனைத் தரிசிப்பவனது எழுபத்தோரு தலைமுறையைச் சேர்ந்த முன்னோர்கள் புனிதமடைந்து கரையேறி விடுவார்கள்.”



# மாந்தருக்குள் ஒரு தெய்வம்

## 21. "காந்தியை நிறுத்துங்கள்"

தாதா அப்துல்லாவின் வழக்கு முடிந்து விட்டது. அதன் பிறகு பிரிட்டோரியாவில் காந்திஜி இருப்பதற்கு முகாந்தரம் எதுவும் கிடையாது. எனவே டர்பனுக்குப் புறப்பட்டுச் சென்று தாய்நாட்டுக்குக் கப்பல் ஏறுவதற்குக் காந்திஜி ஆயத்தமானார். ஆனால் அப்துல்லா சேத் அவ்வளவு சுலபமாக அவரை விட்டுவிடுவாரா? இதற்குள்ளே காந்திஜியின் பேரில் மிக்க அபிமானமும் மரியாதையும் அவருக்கு ஏற்பட்டிருந்தது. ஆகவே, காந்திஜிக்குப் பிரிவு உபசார விருந்து ஒன்று நடத்தினார். பல நண்பர்களை விருந்துக்கு அழைத்தார். எல்லாரும் ஒரு நாள் முழுதும் தங்கி உல்லாசமாகப் பொழுது போக்க ஏற்பாடு செய்திருந்தார்.

அச் சமயம் அங்கே கிடந்த தென்னாப்பிரிக்காப் பத்திரிகைகளைக் காந்திஜி புரட்டிப் பார்த்துக்கொண்டிருந்தார். "இந்தியர்களின் வாக்குரிமை" என்ற தலைப்பைக் கண்டதும் அதன் அடியில் கண்ட செய்தியைப் படித்தார். அப்போது நேட்டால் சட்ட சபையில் விவாதிக்கப்பட்டு வந்த ஒரு மசோதாவைப் பற்றியது அந்தச் செய்தி. நேட்டால் சட்ட சபைத் தேர்தலில் வோட்டுக் கொடுக்கும் உரிமை அங்கே வியாபாரம் முதலிய தொழில்கள் செய்து வந்த இந்தியர்களுக்கு இருந்தது. அதைப் பறித்துவிடும் நோக்கத்துடன் மேற்படி மசோதா கொண்டு வரப்பட்டிருந்தது.

விருந்துக்கு வந்திருந்த இந்திய நண்பர்களிடம் காந்திஜி அதுபற்றி விசாரித்தார். அவர்களுக்கு ஒன்றுமே தெரியவில்லை.

அப்துல்லா சேத் கூறினார் :—"இந்த விஷயமெல்லாம் எங்களுக்கு என்ன தெரியும்? வியாபார சம்பந்தமான விஷயங்களைப் பற்றி மட்டுந்தான் நாங்கள் சிரத்தை எடுத்துக் கொள்கிறோம். ஆரஞ்சு பிரீஸ்டேட் மாகாணத்தில் இந்தியர்கள் வியாபாரமே செய்யக்கூடாது என்று ஏற்பட்டு விட்டது. அதைப்பற்றி நாங்கள் செய்த கிளர்ச்சி பயன்படவில்லை. நாங்கள் படிப்பாளிகள் அல்ல. பத்திரிகை வாங்கி அதிலுள்ள மார்க்கெட் நிலவரங்களைப் பற்றி மட்டும் படித்து விட்டு எறிந்துவிடுகிறோம். சட்ட விவகாரங்களுக்கெல்லாம் இங்குள்ள ஐரோப்பிய அட்டர்னிகளையே நம்பியிருக்கிறோம்."

இதைக் கேட்ட காந்திஜி, "என்ன இப்படிச் சொல்கிறீர்கள்? இந்த நாட்டிலேயே பிறந்து வளர்ந்து கல்வி பயின்ற இந்திய இளைஞர்கள் அநேகர் இருக்கிறார்களே? அவர்கள் உங்களுக்கு உதவி செய்வதில்லையா?" என்றார்.

"அவர்களா? அவர்கள் எங்கள் பக்கத்திலேயே வருவதில்லை. நாங்களும் அவர்களை இலட்சியம் செய்வதில்லை. இங்கே படித்த இந்திய இளைஞர்கள் எல்லாரும் கிறிஸ்தவர்கள். வெள்ளைக்காரப் பாதிரிமார்கள் சொல்கிறபடி ஆடுகிறவர்கள். அந்தப் பாதிரிமார்களோ அரசாங்கத்துக்குக் கட்டுப்பட்டவர்கள். அப்படியிருக்கும் போது எங்களுக்கு அவர்களின் உதவி எப்படிக் கிடைக்கும்?" என்று அப்துல்லா சேத் சோகமான குரலில் கூறினார்.

இதைக் கேட்டதும் காந்திஜிக்கு ஒரே வியப்பாய்ப் போய்விட்டது. கிறிஸ்தவர்கள் ஆன காரணத்தினால் அவர்கள் இந்தியர் அல்லாதவராகி விட்டார்களா? கிறிஸ்தவ மதத்தின் பொருள் இதுதானா? ஒருநாளும் இல்லை. அத்தகைய கிறிஸ்தவ இந்திய வாலிபர்களையெல்லாம் நம்மவர்கள் என்று

உரிமை பாராட்ட வேண்டும் என்பதாகக் காந்திஜிக்குத் தோன்றியது.

ஆனால் இத்தகைய எண்ணங்களினால் என்ன பயன்? காந்திஜியோ கப்பல் ஏற ஆயத்தமாயிருந்தார். தென்னாப்பிரிக்காவில் செய்யவேண்டிய காரியங்களைப்பற்றி அவர் கவலைப்பட்டு ஆவதென்ன? என்றாலும், அப்துல்லா சேத்துக்கு ஓர் எச்சரிக்கை செய்துவிட வேண்டுமென்று தீர்மானித்துக் கூறினார் :—"இந்தியர்களின் வாக்குரிமையைப் பறிக்கும் இந்த மசோதா கேட்டால் சட்டசபையில் நிறைவேறுமானால் இந்தியர்களின் நிலைமை இப்போதைக் காட்டிலும் கஷ்டமாகி விடும்! இந்தியர்களின் சுயமரியாதைக்குப் பங்கம் விளைவிப்பதுடன் இந்திய சமூகத்தையே நாசமாக்கி விடும்! ஆகையால் முன் ஜாக்கிரதையாயிருங்கள்!"

இதைக் கேட்ட அப்துல்லா சேத் சொன்னதாவது :— "நீங்கள் சொல்வது வாஸ்தவமாயிருக்கலாம். ஆயினும் இந்த மசோதா ஏன் கொண்டுவரப் படுகிறது என்பதைத் தெரிந்து கொள்ளுங்கள். சில காலத்துக்கு முன்னால் வரையில் இந்தியர்களுக்கு வாக்குரிமை உண்டு என்னும் விஷயமே எங்களுக்குத் தெரியாமலிருந்தது. எங்களுடைய அட்டர்னிகளில் ஒருவரான மிஸ்டர் எஸ்கோம்ப் ஒரு சமயம் தேர்தலுக்கு நின்றார். என்ஜினியர் ஒருவரோடு அவர் போட்டியிட்டார். என்ஜினியர் தம்மைத் தோற்க அடித்து விடுவாரோ என்ற பயம் மிஸ்டர் எஸ்கோம்புக்கு ஏற்பட்டது. உடனே அவர் எங்களிடம் வந்தார். எங்களுக்கு வாக்குரிமை உண்டு என்பதை எடுத்துக் கூறி எங்களை வோட்டர்களாகப் பதிவு செய்து கொள்ளத் தூண்டினார். அப்படியே பதிவு செய்துகொண்டு அவருக்கு வோட்டும் கொடுத்தோம். என்ஜினியர் தோற்றுப் போனார். இது காரணமாகவே எங்களுடைய வோட்டுரிமையைப் பறிக்கும் சட்டம் கொண்டு வருகிறார்கள் போலிருக்கிறது. தாங்கள் எடுத்துச் சொன்ன பிறகு வோட்டுரிமையின் முக்கியம் எங்களுக்குத் தெரிகிறது. ஆனால் அது தெரிந்து என்ன பயன்? நாங்கள் என்ன செய்ய வேண்டுமென்று தெரியவில்லையே!"

காந்திஜிக்கும் அப்துல்லா சேத்துக்கும் நடந்த சம்பாஷணையை விருந்துக்கு வந்திருந்த பல நண்பர்கள் கேட்டுக் கொண்டிருந்தார்கள். அவர்களில் ஒருவர், "என்ன செய்ய வேண்டுமென்பதை நான் சொல்லட்டுமா? காந்திஜி இந்தியாவுக்குப் புறப்படாமல் தடுத்து நிறுத்திவிட வேண்டும். கப்பல் டிக்கட்டை ரத்து செய்துவிட வேண்டும். இன்னும் ஒரு மாதம் காந்திஜி இங்கே இருக்கட்டும். அவர் காட்டும் வழியைப் பின்பற்றி நாம் வோட்டுரிமைக்காகப் போராடுவோம்" என்றார்.

உடனே அங்கிருந்தோர் அனைவரும் "அதுதான் சரி; அதுதான் சரி! அப்துல்லா சேத்! சகோதரர் காந்தியை எப்படியாவது நிறுத்தி விடுங்கள்!" என்று ஏக காலத்தில் கூச்சலிட்டார்கள்.

அப்துல்லா சேத் காரியத்தில் கண்ணுள்ள மனிதர். காந்திஜியை நிறுத்தினால் அவருக்குச் சன்மானம் கொடுக்க வேண்டாமா என்று யோசனை செய்தார். "நீங்கள் சொல்வது என்னமோ சரியான காரியந்தான். ஆனால் சகோதரர் காந்தியை இனி நிறுத்தி வைப்பதற்கு எனக்குத் தனிப்பட்ட உரிமை இடையாது. நாம் எல்லாரும் சேர்ந்து அவரைத் தங்கிப் போகும்படி கேட்கலாம். ஆனால் அவருடைய சன்மானத்துக்கு என்ன ஏற்பாடு? காந்திஜி பாரிஸ்டர் என்பது ஞாபகமிருக்கட்டும்!" என்று சொன்னார்.

சன்மானத்தைப் பற்றி அப்துல்லா சேத் குறிப்பிட்டது மகாத்மாவுக்கு வருத்தம் அளித்தது. அவர் குறுக்கிட்டுச் சொன்னதாவது:— "சேத்! சன்மானம் என்ற பேச்சே வேண்டாம். பொது ஊழியத்துக்குச் சன்மானம் ஏது? யார் கொடுப்பது? யார் வாங்குவது? இந்த நண்பர்களிடம் எனக்கு அதிகப் பழக்கம் இடையாது. இவர்கள் எல்லாரும் என்னுடன் ஒத்துழைப்பார்கள் என்ற நம்பிக்கை தங்களுக்கு இருந்தால் இன்னும் ஒரு மாதம் நான் இங்கே தங்கிப் போகிறேன். எனக்குச் சன்மானம் ஏதுவும் வேண்டியதில்லை. ஆனால் நாம் தொடங்கப்போகும் முயற்சி பணம் இல்லாமல் நடைபெறாது. தந்தி தபால்கள் அனுப்ப வேண்டும். துண்டுப் பிரசுரங்கள் அச்சிடவேண்டும். சுற்றுப் பிரயாணம் செய்யவேண்டி வரலாம். இதற்கெல்லாம் பணம் தேவை. பணம் மட்டும் போதாது. ஒருவர் மட்டும் தனித்துச் செய்யக்கூடிய காரியம் அல்ல. பலரும் உற்சாகத்துடன் உதவி செய்வதற்கு முன் வர வேண்டும். என்ன சொல்கிறீர்கள்?"

இவ்விதம் காந்தி மகான் சொன்னதும் அந்தக் கூட்டத்தி லிருந்தவர்களில் பலர் ஏக காலத்தில், "ஆண்டவனுடைய மகிமையே மகிமை. கடவுளின் கருணையே

கருணை. நாங்கள் மட்டும் தங்கிப் போகச் சம்மதியுங்கள். ஆள் உதவி, பண உதவி எல்லாம் ஏராளமாக வரும்!" என்று உணர்ச்சியுடன் கூவினார்கள்.

நண்பர்களின் இந்த ஏக மனதான விருப்பத்தை மதித்துக் காந்திஜி தென்னாப்பிரிக்காவில் மேலும் ஒரு மாதம் தங்கச் சம்மதித்தார். இதன் காரணமாகப் பின்னால் எத்தனையோ காரியங்கள் விளைந்தன.

ஒரு மாதம் பல மாதங்களாகிப் பிறகு பல வருஷங்களுமாயின. காந்திஜி தென்னாப்பிரிக்காவில் ஆரம்பித்து நடத்திய சத்தியப் போராட்டமானது உலகத்துக்கே ஒரு புது வழி காட்டுவதாயிற்று. அன்று தென்னாப்பிரிக்காவில் கோஷித்த நண்பர்களைப்போலவே நாமும் "ஆண்டவனுடைய மகிமையே மகிமை!" என்று கோஷிக்க வேண்டியவர்களாகிறோம்.

## 22. வாக்குரிமைப் போர்

தாதா அப்துல்லாவின் வீட்டில் சேத் ஹாஜி முகம்மது அவர்களின் தலைமையில் நேட்டால் இந்தியர்களின் பொதுக் கூட்டம் ஒன்று நடைபெற்றது. எள்ளுப் போட்டால் கீழே விழாதபடி இந்தியர்கள் அன்று கூடியிருந்தார்கள். அக் கூட்டத்தில் இந்தியர்களின் வாக்குரிமையைப் பறிக்கும் மசோதாவைத் தீவிரமாக எதிர்ப்பது என்று தீர்மானிக்கப்பட்டது.

எதிர்ப்பு வேலையை நடத்தத் தொண்டர்கள் சேர்க்கவேண்டும் என்று காந்திஜி சொன்னார். உடனே நான், நீ என்று போட்டி போட்டுக்கொண்டு தொண்டர்கள் முன் வந்தார்கள். பிரபல முஸ்லிம் வியாபாரிகள் தொண்டர்களானார்கள். கடை குமாஸ்தாக்கள் தொண்டர் படையில் சேர்ந்தார்கள். நேட்டாலில் பிறந்து வளர்ந்து படித்துத் தேர்ந்த இந்தியக் கிறிஸ்தவ வாலிபர்களும் தொண்டர்களாக முன் வந்தார்கள்.

காந்தி மகாத்மா ஆரம்பித்த அந்த முதல் போராட்டத்தில் பங்கு பெறுவதற்கு நமது தமிழ்நாட்டிலிருந்து போன சிலரும் பாக்கியம் செய்திருந்தார்கள். அவர்களில் ஸ்ரீ எ. குடந்தைவேலுப் பிள்ளை, ஸ்ரீ ரங்கசாமிப் படையாச்சி என்னும் இருவர் பெயரை மகாத்மா காந்தி தாம் எழுதிய சுய சரிதத்தில் குறிப்பிட்டிருக்கிறார். தம்பி! மேலே போகப் போக, நமது தமிழ்நாட்டைச் சேர்ந்தவர்கள் காந்திஜி தென்னாப்பிரிக்காவில் நடத்திய அஹிம்சைப் போராட்டங்களில் பெரிதும் உதவி செய்திருப்பதைக் காண்பாய்.

அந்தக் கூட்டத்தில் கூடியிருந்தவர்கள் எல்லாருக்கும் இந்த மட்டும் ஒரு பொது ஊழியத்தில் ஈடுபடும் சந்தர்ப்பம் தங்களுக்குக் கிடைத்ததே என்று சந்தோஷமாயிருந்தது. நேட்டாலில் இந்திய சமூகத்துக்கு வருவதற்கிருந்த பெரும் அபாயத்தை எண்ணித் தங்களுக்குள் இருந்த எல்லா வேற்றுமைகளையும் அவர்கள் மறந்தார்கள். உயர்ந்தவர், தாழ்ந்தவர், பெரியவர், சிறியவர், எஜமானர், ஊழியர், ஹிந்து, முஸ்லிம், பார்ஸி, கிறிஸ்தவர், குஜராத்தியர், மதராஸியர் ஆகிய சகல வித்தியாசங்களும் ஒழிந்து எல்லாரும் ஒன்றுபட்டார்கள்.

நேட்டால் சட்ட சபையில் மசோதா நிறைவேறும் தறுவாயில் இருந்தது. எனவே, முதல் வேலையாகச் சட்ட சபை அக்கிராசனருக்கு ஒரு தந்தி கொடுக்கப்பட்டது. இந்தியர் வாக்குரிமை மசோதா நிறைவேற்றுவதைத் தள்ளிவைக்க வேண்டுமென்று அந்தத் தந்தியில் வேண்டிக் கொள்ளப்பட்டது. அம்மாதிரியே நேட்டால் பிரதம மந்திரிக்கும், தாதா அப்துல்லாவின் அட்டர்னி மிஸ்டர் எஸ்கோம்புக்கும் தந்திகள் சென்றன.

விவாதம் இரண்டு நாளைக்குத் தள்ளி வைக்கப்படும் என்று சட்டசபைத் தலைவரிடமிருந்து பதில் வந்தது. எனவே, இந்த ஆரம்ப நல்ல சகுனத்தினால் தொண்டர்களின் உற்சாகம் அதிகமாயிற்று.

சட்ட சபைக்கு அனுப்ப இந்தியர்களின் விண்ணப்பம் இரண்டு நாளைக்குள் தயாராக வேண்டும். விண்ணப்பத்தில் ஆயிரக் கணக்கான கையொப்பங்கள் வாங்கப்பட வேண்டும். எனவே, காந்திஜியின் தலைமையில் இரவெல்லாம் கண் விழித்துத் தொண்டர்கள் வேலை செய்தார்கள்.

காந்திஜி விண்ணப்ப நகலைத் தயாரித்தார். அதற்கு ஏககாலத்தில் ஐந்து பிரதிகள் எடுக்கப் பட்டன. அவற்றை எடுத்துக்

கொண்டு தொண்டர்கள் நாலா பக்கமும் விரைந்தார்கள். சிலர் தங்களுடைய சொந்த வண்டியில் சென்றார்கள். சிலர் தாங்களே வாடகை கொடுத்து வண்டி வைத்துக் கொண்டு சென்றார்கள். ஒரே நாளில் கையொப்பங்கள் ஏராளமாக வாங்கப்பட்டன. குறிப்பிட்ட சமயத்தில் விண்ணப்பம் சட்ட சபைக்குச் சென்றது. விண்ணப்பத்தில் கண்ட காரணங்களுக்குச் சர்க்கார் தரப்பில் நொண்டிச் சமாதானங்கள் சொல்லப்பட்டன. கடைசியில் அந்த அநியாய மசோதா சட்டமாகி விட்டது.

இவ்விதம் காரியம் கைகூடாமற் போனாலும் அது சம்பந்தமாக நடந்த முயற்சி காரணமாக இந்திய சமூகமே புத்துயிர் பெற்றது. முயற்சியை அத்துடன் விட்டு விடுவதில்லையென்றும், இந்தியர் ஒருமுகமாகத் தங்கள் வியாபார உரிமைக்காகவும் அரசியல் உரிமைக்காகவும் தொடர்ந்து போராடுவதென்றும் தீர்மானித்தார்கள்.

அப்போது லார்ட் ரிப்பன் என்பவர் பிரிட்டிஷ் சாம்ராஜ்ய மந்திரி சபையில் குடியேற்ற நாட்டு மந்திரியாயிருந்தார். நேட்டால் சட்ட சபை செய்த சட்டத்தை நிராகரிக்க வேணுமென்று அவருக்கு மகஜர் அனுப்பத் தீர்மானிக்கப்பட்டது. இந்த மகஜரில் மறுபடியும் இந்தியர்களின் கையொப்பங்கள் வாங்கப்பட்டன. மொத்தம் பதினாயிரம் கையொப்பங்களுடன் குடியேற்ற நாட்டு மந்திரிக்கு மகஜர் போயிற்று.

காந்திஜி மேற்படி மகஜரை அச்சிட ஏற்பாடு செய்தார். ஆயிரம் பிரதிகள் எடுத்து இந்தியாவிலுள்ள பத்திரிகைகள், பிரமுகர்கள் எல்லாருக்கும் அனுப்பினார். இந்தியாவில் பல பத்திரிகைகள் மகஜரை ஆதரித்து அபிப்பிராயம் எழுதின. பம்பாய் "டைம்ஸ் ஆப் இந்தியா" பத்திரிகையும் லண்டன் "டைம்ஸ்" பத்திரிகையுங் கூட மேற்படி மகஜரைப் பற்றிச் சாதகமாக அபிப்பிராயம் எழுதின.

இதற்குள் ஏறக்குறைய ஒரு மாதம் ஆகிவிட்டது. நேட்டாலில் காந்திஜிக்குப் பல நண்பர்கள் ஏற்பட்டுவிட்டார்கள். எல்லாரும் ஒருமுகமாகக் காந்திஜி நேட்டாலிலேயே தங்கிவிட வேண்டும் என்று வற்புறுத்தினார்கள்.

காந்திஜிக்கும் அங்கே தாம் தொடங்கிய வேலையைத் தொடர்ந்து நடத்திப் பார்த்து விட வேண்டும் என்றிருந்தது. ஆனால், காலட்சேபம் நடத்துவது எப்படி? தனி ஜாகை வைத்துக்கொண்டு வாழ்க்கை நடத்துவதாயிருந்தால் குறைந்த பட்சம் வருஷத்துக்கு 300 பவுன் வேண்டியிருக்கும். இந்த வருமானம் தரக்கூடிய அளவுக்குத் தமக்குக் கோர்ட்டு வேலை தருவதாயிருந்தால் தென்னாப்பிரிக்காவிலேயே தங்குவதாகக் காந்திஜி சொன்னார்.

"நன்றாயிருக்கிறது! தங்களைத் தங்கும்படிச் சொல்லிவிட்டுச் செலவுக்கு ஏற்பாடு செய்யாமல் சும்மா இருந்து விடுவோமா? தாங்கள் செய்யும் பொது வேலைக்காகவே 300 பவுன் வசூல் செய்து தந்துவிடுகிறோம்" என்று நண்பர்கள் சொன்னார்கள்.

பொது வேலைக்காகப் பணம் பெற்றுக் கொள்ளக் காந்திஜிக்கு விருப்பமில்லை.

"அவ்வளவு தொகை கிடைக்கும்படியாக எனக்குப் பாரிஸ்டர் தொழிலில் கேஸ்கள் கொடுத்தால் போதும். பொது ஊழியத்துக்காகப் பணம் பெற்றுக் கொள்ள மாட்டேன்" என்று காந்தி மகாத்மா வற்புறுத்தினார்.

அதன்பேரில் சுமார் இருபது இந்திய வியாபாரிகள் ஒரு வருஷத்துக்குக் காந்திஜியைத் தங்களுடைய வக்கீலாக அமர்த்திக் கொண்டு அவருடைய சேவைக்காக முன் பணமும் கொடுத்தார்கள்.

காந்திஜியும் நேட்டாலில் ஸ்திரமாக வாசம் செய்வதென்று முடிவு செய்தார். ஆனால் அந்த முடிவைக் காரியத்தில் நிறைவேற்றுவது அவ்வளவு சுலபமாயில்லை. எதிர்பாராத தடை ஒன்று குறுக்கிட்டது.

வக்கீல் வேலையில் கிடைக்கும் வருமானத்தைக் கொண்டல்லவா காந்திஜி அங்கே வாழ்க்கை நடத்த உத்தேசித்தார்? அந்த உத்தேசத்துக்கு நேட்டால் வக்கீல் சங்கத்தார் இடையூறு செய்ய முன் வந்தார்கள்.

நேட்டால் ஹைக்கோர்ட்டில் ஆஜராகி வழக்கு நடத்தும் உரிமைக்காகக் காந்திஜி விண்ணப்பம் செய்துகொண்டார். அவர் பாரிஸ்டர் என்பதற்கு ருசு வேண்டும் அல்லவா? அதற்காக பம்பாய் ஹைக் கோர்ட்டில் தாம் வக்கீல் தொழில் நடத்துவதற்காகப் பெற்றிருந்த அங்கீகாரப் பத்திரத்தையும், அத்துடன் இரண்டு நேட்டால் ஐரோப்பியர்களின் நற்சாட்சிப் பத்திரத்தையும் சேர்த்துக் காந்திஜி விண்ணப்பத்தை அனுப்பினார். தாதா அப்துல்லாவின் சிநேகிதரான மிஸ்டர் எஸ்கோம்ப் என்பவர் தான் அப்போது அட்டர்னி ஜெனரல்;

அதாவது சர்க்கார் வக்கீல். அவரே காந்திஜியின் விண்ணப்பத்தைக் கோர்ட்டில் சமர்ப்பிக்க முன் வந்தார்.

ஆனால் யாரும் சற்றும் எதிர்பாராத விதமாக கேட்டால் வக்கீல் சங்கத்தார் குறுக்கிட்டுக் காந்திஜியின் விண்ணப்பத்தை ஆட்சேபித்தார்கள். காந்திஜி இங்கிலாந்தில் பெற்ற அசல் பாரிஸ்டர் சர்டிபிகேட் விண்ணப்பத்தோடு சேர்க்கப்பட வில்லையென்பது அவர்கள் குறிப்பிட்ட ஒரு காரணம். மேற்படி சர்டிபிகேட்டைப் பம்பாய் ஹைக்கோர்ட்டில் கொடுத்து விட்டுத்தான் அந்த ஹைக்கோர்ட்டின் அங்கீகாரத்தை மகாத்மா பெற்றிருந்தார். ஆகவே அசல் சர்டிபிகேட்டை இப்போது எப்படிக் கொண்டு வர முடியும்?

அசல் பாரிஸ்டர் சர்டிபிகேட் இல்லாத காரணத்தை மட்டும் கேட்டால் வக்கீல் சங்கத்தார் குறிப்பிடவில்லை. தென்னாப்பிரிக்கா வளம் பெற்றுச் செழிப்படைந்ததற்கெல்லாம் காரணம் ஐரோப்பியர்கள் ஆதலால், தென்னாப்பிரிக்கா கோர்ட்டுகளில் ஐரோப்பிய வக்கீல்கள்தான் தொழில் நடத்தலாம் என்றும், இந்திய வக்கீல்களுக்கு இடங் கொடுத்தால் காலடைவில் ஐரோப்பிய வக்கீல்களைக் காட்டிலும் இந்திய வக்கீல்கள் அதிகமாகி விடுவார்கள் என்றும் காரணம் சொல்லி ஆட்சேபித்தார்கள்.

காந்திஜிக்கு இது பெரும் வியப்பையும் ஏமாற்றத்தையும் அளித்தன. நீதி வழங்குவதற்காக ஏற்பட்ட நியாய ஸ்தலங்களிலும் இப்படிப்பட்ட அநீதியா என்று ஆச்சரியப் பட்டார். பொங்கிவந்த ஆத்திரத்தை அடக்கிக்கொண்டு செய்ய வேண்டிய காரியங்களை முறைப்படி செய்தார். கடைசியில் கோர்ட்டில் விண்ணப்பம் வந்தது. நல்ல வேளையாக நீதிபதி அவ்வளவு மோசமான மனப்பான்மை உடையவராயில்லை. வக்கீல் சங்கத்தின் ஆட்சேபங்களை அவர் நிராகரித்து விட்டுக் காந்திஜியை அட்வகேட்டாக அங்கீகரித்தார். அச்சமயம் நீதிபதி கூறியதாவது:—

"விண்ணப்பதாரர் விண்ணப்பத்துடன் அசல் அத்தாட்சிப் பத்திரத்தைச் சேர்க்கவில்லையென்னும் வாதம் பொருளற்றது. அவர் பொய்யான அத்தாட்சிகளைச் சேர்த்திருந்தால் அவர் மீது நடவடிக்கை எடுத்துக் கொள்ள இடமிருக்கிறது. விசாரணையில் குற்றவாளியென்று நிரூபிக்கப்பட்டால் அப்போது அவருடைய பெயரை எடுத்து விடலாம். வக்கீல்களின் விஷயத்தில் வெள்ளைக்காரர், வேறு நிறத்தவர் என்னும் வேற்றுமையைச் சட்டம் அங்கீகரிக்கவில்லை. ஆதலின் மிஸ்டர் காந்தியை அட்வொகேட்டாக அங்கீகரிக்க மறுப்பதற்கு நமக்கு எவ்வித அதிகாரமும் கிடையாது. அவருடைய விண்ணப்பத்தை அங்கீகரிக்கிறோம். மிஸ்டர் காந்தி, இனி நீங்கள் சத்தியப் பிரமாணம் செய்யலாம்."

அவ்வாறே காந்திஜி சத்தியப் பிரமாணம் செய்து கேட்டால் ஹைக் கோர்ட்டில் அட்வகேட் ஆனார். ஆனாலும் வக்கீல் சங்கத்தார் கிளப்பிய மேற்படி ஆட்சேபனை அவருடைய மனத்தில் ஆழ்ந்து பதிந்தது. தென்னாப்பிரிக்காவில் உள்ள படித்த ஐரோப்பியர் கூட எத்தகைய துவேஷ மனப்பான்மை கொண்டிருக்கிறார்கள் என்று மகாத்மாவுக்குத் தெளிவாகத் தெரிந்தது.

---

## ஆசியா எழுந்தது!

சென்ற வருஷம் டில்லியில் நடந்த ஆசிய மகாநாட்டுக்கு ஆசியாக் கண்டத்தில் உள்ள எல்லா தேசங்களிலிருந்தும் பல பிரதிநிதிகள் வந்திருந்தார்கள்.

அவர்கள், காந்திஜியும் மேற்படி மகாநாட்டுக்கு வந்து ஏதாவது பேச வேண்டும் என்று விரும்பினார்கள். அவர்களுடைய விருப்பத்துக்கிணங்க காந்திஜியும் மேற்படி மகாநாட்டுக்கு வந்தார்.

காந்திஜி மேடைக்கு வந்ததும், மரியாதைக்கு அறிகுறியாக எல்லாப் பிரதிநிதிகளும் எழுந்து நின்றார்கள்.

ஒரு அமெரிக்கப் பத்திரிகை இதைப் பற்றிக் குறிப்பிடும்போது "**காந்திஜி வந்தார்; ஆசியாவே எழுந்தது!**" என்று எழுதியிருந்தது.




### ஐந்தாம் அத்தியாயம்

## கிட்டாவய்யர் குடும்பம்

**ரா**ஜம் பேட்டை கிட்டா வய்யர் அவருடைய தந்தைக்கு ஒரே புதல்வர். தகப்பனார் காலமான பிறகு அகண்ட காவேரிக் கரையில் அவர் தேடிவைத்திருந்த பல ஏக்கரா நன்செய் நிலத்துக்கும் கிராம முன்சீப் வேலைக்கும் தனி உரிமை அடைந்தார். மிக்க வளமான பூமி; பொன் போட்டால் பொன் விளையக் கூடியது; ஆயினும் அந்நிலத்தில் பொன்னைப் போடாமல் பொன்னைக் காட்டிலும் சிறந்த சம்பா நெல், கதலிவாழை, வெற்றிலை, கரும்பு முதலியவை பயிராக்கி வந்தனர்.

தகப்பனார் காலத்திலேயே அவருடைய சகோதரிகள் இருவருக்கும் கலியாணம் ஆகிவிட்டது. ஆகவே அவர் குடும்பத் தலைவரான பிறகு குடும்பத்துக்குப் பெரிய செலவு ஒன்றுமில்லை. எனினும் தான தர்மங்களிலும் பொதுக் காரியங்களிலும் சிநேகிதர்களுக்கு உதவி செய்வதிலும் மூத்த புதல்வனைப் படிக்க வைப்பதிலும் தாராளமாகப் பணம் செலவழித்துக் கொண்டிருந்த படியால் தகப்பனார் காலத்துக்குப் பிறகு சொத்து விருத்தியடையவில்லை. புதல்வி லலிதாவுக்கு மட்டும் வருஷத்துக்கு ஒரு வயது வீதம் கூடிக் கொண்டேயிருந்தது. சென்ற வருஷமே கலியாணம் செய்திருக்க வேண்டும்,— இந்த வருஷமும் கலியாணம் செய்யாமலிருந்தால் குடி முழுகிப் போய்விடும் என்பது அவருடைய மனைவி சரஸ்வதி அம்மாளின் திடமான அபிப்பிராயம்.

சென்ற வருஷம் கிட்டா வய்யர் லலிதாவின் கலியாணத்தில் அதிக சிரத்தை காட்டாததின் காரணம் அவர் குடும்ப சகிதமாகப் பம்பாய்க்கு பிரயாணம் செய்ய நேர்ந்ததுதான்.

கிட்டா வய்யரின் சகோதரிகளில் ஒருத்தி மூத்தவள். அந்த அம்மாளுக்குச் சமீபகிராமம் ஒன்றில் வைதிக குடும்பத்தில் கலியாணமாகியிருந்தது. இரண்டு குடும்பத்துக்கும் அடிக்கடி போக்கு வரவு சம்பந்தம் இருந்தது.

கிட்டா வய்யரின் தங்கை ராஜமோ பம்பாயில் இருந்தாள். சிறு பிராயத்தில் ராஜம் கிட்டா வய்யரின் வாஞ்சைக்குப் பெரிதும் உரிமை பெற்றிருந்தவள். அவளுடைய கலியாணத்தின் போது கிட்டா வய்யர் காட்டிய உற்சாகத்துக்கும் பெருமைக்கும் அளவே கிடையாது. ராஜத்தை மணந்த மாப்பிள்ளையைப் பல தடவை "அதிர்ஷ்டக்காரன்" என்று அவர் பலர் அறியப் பாராட்டினார். ஆனால் யாரும் அறிய முடியாத தெய்வ சித்தத்தினால் ராஜத்தின் அதிர்ஷ்டம் அவ்வளவு சரியாக இல்லை. கலியாணம் ஆன உடனேயே மாப்பிள்ளை துரைசாமிக்

குப் பம்பாயில் ரயில்வே காரியாலயத்தில் நல்ல உத்தியோகம் ஆயிற்று. கொஞ்ச காலத்துக்குப் பிறகு ராஜம்மாளும் பம்பாய்க்குப் போனாள்.

ராஜத்தின் இல்வாழ்க்கை அவ்வளவு ரம்யமாக இல்லை என்று சீக்கிரத்திலேயே தெரிய வந்தது. ஆனாலும் விவரம் இன்னதென்று தெரியவில்லை. மான உணர்ச்சி அதிகம் உள்ளவளான ராஜம்மாள் தன்னுடைய கஷ்டங்களைப் பகிரங்கப் படுத்திக் கொள்ள விரும்பவில்லை. பம்பாய்க்கும் ராஜம் பிறந்த கிராமத்துக்கும் போக்குவரவு அடிக்கடி இருக்க முடியாதல்லவா? நாளடைவில் கடிதப் போக்குவரவு கூட நின்று போயிற்று. சிற்சில சமயம் கிட்டா வய்யர் "ராஜம் எப்படி யிருக்கிறாளோ?" என்று எண்ணி ஏங்குவார். அப்போது அவருடைய கண்களில் ஒரு சொட்டுக் கண்ணீர் துளிக்கும். கண்ணைத் துடைத்துக் கொண்டு, "அவள் தலைவிதி அப்படி!" என்று எண்ணி ஒரு பெருமூச்சு விட்டு விட்டுத் தம் காரியத்தைப் பார்க்கத் தொடங்குவார்.

இந்த நிலையில், ஒரு வருஷத்துக்கு முன்னால், ராஜத்திட மிருந்து கடிதம் ஒன்று வந்தது. மிக உருக்கமான கடிதம் அது. இத்தனை வருஷமாக எவ்வளவோ பொறுமையுடன் கஷ்டங்களைச் சகித்துக் கொண்டிருந்தும் தன்னுடைய மன வேதனை தீர்ந்தபாடில்லை என்று ராஜம் எழுதியிருந்தாள். வர வரத் தன் உடம்பு நிலையும் மோசமாகி வருகிறதென்றும் கூடிய சீக்கிரம் வந்து தன்னை ஒரு தடவை பார்த்து விட்டுப் போக வேண்டுமென்றும் தமையனைக் கேட்டுக்கொண்டிருந்தாள். "வரும்போது அவசியம் மன்னியையும் லலிதாவையும் அழைத்து வரப் பிரார்த்திக்கிறேன். சீதா அவளுடைய அம்மங்காளைப் பார்க்க வேண்டும் என்று துடி துடித்துக்கொண்டிருக்கிறாள்" என்றும் எழுதியிருந்தாள்.

கிட்டா வய்யருக்குத் தம் மனைவியைப் பம்பாய்க்கு அழைத்துப் போக விருப்பமில்லை. அழைத்துப் போவது அவ்வளவு ரஸப்படாது என்று எண்ணினார். அதோடு சரஸ்வதி அம்மாளும் வருவதற்கு விரும்பமாட்டாள் என்று நினைத்தார். ஆனால் சரஸ்வதி அம்மாளின் மனோ நிலை அதற்கு நேர்மாறாக இருந்தது. லலிதாவுடன் பம்பாய்க்குப் போவதில் அவள் துடியாக நின்றாள். குழந்தைகளுக்குத் தலை மொட்டை போடுவதற்காகத் திருப்பதி யாத்திரை போனதைத் தவிர அந்த அம்மாள் பிரயாணம் அதிகமாகச் செய்ததில்லை. பிரயாணம் செய்ய ஆசைப்பட்டதும் கிடையாது. ஆனால் இப்போது பம்பாய்க்குப் போவதில் ஆத்திரமே காட்டினாள். காரணம் லலிதாவுக்கு வயது பதினாறு ஆகி யிருந்ததுதான். "நாலு இடத்துக்குப் போய்ப் பார்த்தால்தானே நல்ல வரனாகக் கிடைக்கும்? இந்தப் பட்டிக் காட்டிலேயே உட்கார்ந்திருந்தால் எப்படி?" என்று தனக்குத் தானே சொல்லிக் கொண்டாள்.

ஆகவே, கிட்டா வய்யர் குடும்ப சகிதமாகப் பம்பாய்க்குப் போனார். சரஸ்வதி அம்மாள், லலிதா, லலிதாவின் தம்பி சாம்பு ஆகியவர்களும் போயிருந்தார்கள். பிரயாணம் வெகு உற்சாகமா யிருந்தது. துரைசாமி ஐயர் ஸ்டேஷனுக்கு வந்து அவர்களைத் தாதரில் இருந்த தம் ஜாகைக்கு அழைத்துச் சென்றார்.

பம்பாயில் தங்கி யிருந்தபோது லலிதாவும் சாம்புவும் வெகு குஷியா யிருந்தார்கள். லலிதாவும் அவளை விட ஒரு வயது மூத்தவளான சீதாவும் பிராண சிநேகிதிகளானார்கள். ஒருவரை யொருவர் மறப்பதில்லை யென்றும், சிநேகம் மாறுவதில்லை யென்றும் கையடித்துச் சத்தியம் செய்து கொண்டார்கள்.

லலிதாவுக்கும் சாம்புவுக்கும் பம்பாய் நகரத்துக் காட்சிகளை யெல்லாம் காட்டுவதில் சீதாவுக்கு அளவில்லாத பெருமை; சொல்ல முடியாத உற்சாகம். மிருகக் காட்சிச் சாலையாகட்டும், மியூஸியம் ஆகட்டும், ரயில்வே ஸ்டேஷன்கள் ஆகட்டும், கடற்கரை யாகட்டும், தாஜ்மகால் ஹோட்டல் ஆகட்டும், எட்டு மாடியுள்ள மாளிகைகள் ஆகட்டும், மலபார் குன்றிலுள்ள மாடித் தோட்டம் ஆகட்டும், — லலிதா பார்த்ததையே பார்த்துக்கொண்டு பிரமித்துப்போனபடி நிற்பாள். சீதாவோ, அடிக்கடி,

“இங்கே வாடி! இதைப் பாரடி! இப்படிப் பார்த்ததையே பார்த்துக் கொண்டு நின்றால் பட்டிக்காடு என்று பரிகாசம் செய்வார்கள். ஓடி வாடி! ஓடி வா!” என்று அவசரப்படுத்துவான்; அதிகாரமும் பண்ணுவான். கையைப் பிடித்து இழுப்பான்; முதுகைப் பிடித்துத் தள்ளுவான். “சீ! அசடே!” என்று சில சமயம் வையவும் வைவாள். ஆனால் இதையெல்லாம் லலிதா பொருட்படுத்தவில்லை. சீதாவிடம் அவளுக்கு ஏற்பட்டிருந்த அளவில்லாத பிரியமும் அவளாலே தானே இந்தப் பம்பாய்க் காட்சிகளையெல்லாம் பார்க்கிறோம் என்ற நன்றி உணர்ச்சியும் சேர்ந்து சீதா எது சொன்னாலும் லலிதாவுக்குக் கோபம் வராதபடி செய்திருந்தன. சீதா இழுத்த இழுப்புக்கெல்லாம் லலிதா ஒத்துப் போகும்படியும் செய்திருந்தன. இதனால் லலிதா பம்பாயில் தங்கிய நாட்களில் எப்போதும் ஒரே உற்சாகமாயிருந்தாள். இதற்கு முன் எந்த நாளிலும் அவள் அவ்வளவு சந்தோஷமாயிருந்ததில்லை.

ஆனால் கிட்டா வய்யரும், அவருடைய மனைவி சரஸ்வதி அம்மாளும் வெவ்வேறு காரணங்களினால் லலிதாவுக்கு நேர்மாறான மனோ நிலையை அடைந்திருந்தார்கள்.

ராஜத்தின் வாழ்க்கை துன்பமயமானது என்றும் ஏமாற்றமும் மனவேதனையும் நிறைந்தது என்றும் கிட்டா வய்யர் அறிந்தார். ஆனால் இதன் காரணங்களை அவர் தெளிவாக அறிய முடியவில்லை. அவர்கள் பம்பாயில் தங்கியிருந்த நாட்களில் துரைசாமி அபூர்வமாகவே வீட்டுக்கு வந்தார். வந்தபோதெல்லாம் முகமலர்ச்சியோடு மரியாதையாகவே பேசினார். இரவு நேரங்களில் ஏதோ ‘டியூடி’ இருக்கிறதென்பதாய்ச் சொல்லி அவர் வீட்டுக்கு வருகிறதில்லை.

ராஜத்தின் கஷ்டங்களைக் கிட்டா வய்யர் அறிந்து கொள்ள முயன்றார். பணக் கஷ்டம் இருப்பது பிரத்யட்சமாகத் தெரிந்தது. ராஜத்தின் கழுத்தில் மஞ்சள் கயிற்றில் தொங்கிய திருமாங்கல்யத்தைத் தவிர வேறு ஆபரணம் என்பதே கிடையாது.

கிட்டா வய்யர் எதிர்பார்த்தபடி ராஜம் அதிகமாக மெலிந்து படுத்த படுக்கையாகவும் இல்லை. சுருசுருப்பாக நடமாடிக் கொண்டும் வேலை செய்து கொண்டுந்தான் இருந்தாள்.

கிட்டா வய்யர் ராஜத்தைக் கேட்டபோது, “எனக்கு உடம்பு ஒன்றுமில்லை, அண்ணா! உங்களையெல்லாம் பார்க்க வேண்டுமென்று ஆசையாயிருந்தது. அதற்காகத்தான் அப்படி எழுதியிருந்தேன்” என்றாள்.

கிட்டா வய்யர் இதனால் ஏமாந்து விடாமல் மேலும் மேலும் கேள்விகள் கேட்டு விசாரணை செய்தார்.

“ஏன், அம்மா, ராஜம்! உன் அகத்துக்காரருக்கு ஏதேனும் கெட்ட பழக்கம் உண்டோ? குடி, கிடி......”

“குடி, குதிரைப் பந்தயம் இன்னும் எல்லாம் உண்டு, அண்ணா! அதையெல்லாம் ஏன் கேட்டு என் வயிற்றெரிச்சலைக் கிளப்புகிறாய்?” என்று ராஜம் சொல்லி விட்டுக் கலகலவென்று கண்ணீர் வடித்தாள். கிட்டா வய்யர் அவளுக்குத் தேறுதல் கூறிக் கொஞ்சம் கொஞ்சமாக எல்லா விவரங்களையும் தெரிந்து கொண்டார். குதிரைப் பந்தயத்தைத் தவிர ‘ஸ்டாக் எக்ஸ்சேஞ்’ என்று சொல்லப்படும் பங்கு விற்பனை மார்க்கெட்டிலும் துரைசாமி ‘விளையாடுவது’ உண்டு என்று அறிந்தார். சென்ற மாதத்தில் அவர் பேரில் வருவதாக இருந்த ஒரு மோசடி வழக்கிலிருந்து காப்பாற்றுவதற்காக ராஜம் தன்னுடைய நகைகளையெல்லாம் விற்றுக் கொடுத்ததாகவும் தெரிந்து கொண்டார். சூதாட்டங்களோடு கூடச் சிற்றின்ப விவகாரங்களிலும் துரைசாமி ஈடுபடுவதுண்டு என்று ராஜத்தின் சிற்சில வார்த்தைகளிலிருந்து கிட்டா வய்யர் ஊகித்தார். ஆனால் தங்கையிடம் இதைப்பற்றி அதிகம் கேட்பதில் உள்ள விரஸத்தைக் கருதிக் கேட்கவில்லை.

பம்பாய்க்கு வருகிற வரையில் சரஸ்வதி அம்மாளைப்போல் சாதுவும் நல்ல குணம் படைத்தவளுமான ஸ்திரீ இன்னொருத்தி இருந்திருக்க முடியாது. ‘படி தாண்டாப் பத்தினி’ என்று சொன்னால் அவளைத்தான்

சொல்ல வேண்டும். இரைந்து பேசத் தெரியாது. ஒரு விஷயத்தைப் பற்றிக் கிட்டாவய்யர் அபிப்பிராயம் சொல்லி விட்டால், அதற்கு மேல் அவனுக்கு அப்பீலே கிடையாது.

ஆனால் பம்பாய் வந்ததிலிருந்து, துன்பப்பட்டிருந்த ராஜத்தினிடம் கிட்டாவய்யர் காட்டிய பிரியத்தையும் அநுதாபத்தையும் பார்க்கப் பார்க்க, சரஸ்வதி அம்மாளின் உள்ளத்தில் குரோதப் புகை கிளம்பத் தொடங்கியது. ராஜத்தின் கஷ்டங்களைத் தெரிந்து கொள்வதற்காக அவளிடம் அவர் தனியாகப் பேசும்போதெல்லாம் சரஸ்வதி அம்மாள் அங்கே தேடிக் கொண்டு வந்து சேர்வாள். "சரசு! "நீ போ!" என்றால், "இரகசியம் என்ன இரகசியம்? நல்ல வெட்கக் கேடு!" என்று கன்னத்தைத் தோள் பட்டையில் இடித்துக் கொண்டு திரும்பிச் செல்வாள்.

"அந்தப் பிராமணர் பரம சாது; தங்கக் கம்பி; பார்ப்பதற்கு மகா ராஜா மாதிரி யிருக்கிறார். இந்தத் தொடை காலிதான் இப்படிக் குடித்தனத்தைப் பாழாக்கி யிருக்கிறாள்!" என்று முணு முணுப்பாள். தன் புதல்வி லலிதாவைக் காட்டிலும் ராஜத்தின் மகள் சீதா சிவப்பாகவும் இலட்சணமாகவும் இருப்பதைப் பார்க்கப் பார்க்கச் சரஸ்வதிக்கு ஆத்திரம் பொங்கியது. சீதா கல கலவென்று பேசுவதும் சிரிப்பதும் இவளுக்குக் குரோதத்தை உண்டாக்கியது. லலிதா எப்போதும் சீதாவைப் பின் தொடர்ந்து போவதும், அவள் "ஏ! போடி! வாடி" என்று அதட்டுவதையெல்லாம் பொறுத்துக் கொண்டிருப்பதும், அவள் என்ன சொன்னாலும் அதை ஆவலோடு கேட்பதும் சரஸ்வதி அம்மாளுக்குப் பிடிக்கவேயில்லை.

அந்த நிலைமையை ராஜம் ஒருவாறு அறிந்துகொண்டு தன்னுடைய இனிய பேச்சினாலும் உபசாரத்தினாலும் மன்னியைக் கூடுமான வரையில் சாந்தப்படுத்தி வந்தாள். லலிதாவின் பேரில் ரொம்பவும் அதிகாரம் செலுத்தாதபடி சீதாவுக்கும் அடிக்கடி எச்சரிக்கை செய்து வந்தாள்.

இதனாலெல்லாம் சரஸ்வதி அம்மாளின் மனம் சாந்தமடையவில்லை. லலிதா, சீதா இவர்களின் தோற்றத்தை அவளுடைய உள்ளம் அடிக்கடி ஒப்பிட்டுப் பார்த்துக் கொண்டிருந்தது. லலிதா மாநிற மானவள். சீதாவின் மேனியோ வெண்பட்டையொத்த சந்தன வர்ணங் கொண்டது. சாமுத்திரிகா இலட்சணம் அறிந்தவர்கள் ஒருவேளை சீதாவைவிட லலிதா



தான் அழகுடையவள் என்று சொல்லக்கூடும். ஆனால் சாதாரணமாய் மேலெழுந்த வாரியாகப் பார்ப்பவர்களுக்கு இருவரில் சீதாதான் அழகி எனத் தோன்றும். லலிதாவின் கண்கள் நீண்டு சாந்தம் குடிகொண்டு தாமரை இதழின் வடிவை ஒத்திருந்தன. சீதாவின் கண்களோ அகன்று வட்ட வடிவமாய்க் குமுத மலரையொத்திருந்தன. அவளுடைய கண்ணிமைகளுக் குள்ளே கருவிழிகள் அங்கு மிங்கும் சுழன்று சஞ்சல புத்தியைக் காட்டின என்றாலும், பார்ப்பவர்களை உடனே பிரமிக்கும்படி செய்யும் தன்மை வாய்த்திருந்தன.

சீதா பம்பாய்ப் பட்டணத்தின் நாகரிகத்தில் பிறந்து வளர்ந்தவள்; லலிதாவோ பட்டிக் காட்டிலேயே இருந்தவள். அதற்குத் தகுந்தபடி அவர்களுடைய நடை உடை பாவனைகள் அமைந்திருந்தன. சீதாவின் காதுக்கருகில் தொங்கிய சுருட்டை மயிர் ஒன்றே போதும் அவளுடைய முகத்தின் லாவண்யத்தை ஸ்தாபிதம் செய்வதற்கு. அவளுடைய பேசுந்திறமையைப் பற்றியோ கேட்க வேண்டியதில்லை. கலகல வென்று வார்த்தைகளைக் கொட்டிக் கொண்டிருப்பாள். லலிதா ஒரு வார்த்தை சொல்வதற்குள் சீதா பத்து வார்த்தை சொல்லி விடுவாள். 'கான்வெண்ட்' பள்ளிக்கூடத்தில் படித்தவளாதலால் பேசிக்கொண்டே யிருக்கும் போது திடீரென்று ஏதாவது இங்கிலீஷ் பாட்டில் ஒரு வரியைப் பாடி லலிதாவைத் திகைக்கப் பண்ணி விடுவாள்.




இவ்வளவுக்கும் மேலாக லலிதாவை விடச் சீதா ஒன்றரை வயது அதிகமானவள். ஆகையால் அவளிடம் யௌவனத்தின் சோபை பிரகாசிக்கத் தொடங்கி யிருந்தது.

இப்படியெல்லாம் ஆராய்ந்து பார்த்து, லலிதாவைக் காட்டிலும் சீதா கவர்ச்சி பெற்றிருப்பதென் என்பதாகச் சரஸ்வதி அம்மாளால் நிர்ணயிக்க முடியவில்லை. மொத்தத்தில் தன் புதல்வியைக் காட்டிலும் தன் நாத்தனாரின் மகள் அதிக அழகு பெற்று விளங்குகிறாள் என்பதை மட்டும் அவள் உள்ளம் உணர்ந்தது. இது காரணமாக அந்த அம்மாளின் சுபாவமே மாறிவிட்டது.

ராஜம் பேட்டை போஸ்டுமாஸ்டர் பங்காரு நாயுடு சரஸ்வதி அம்மாளைப் பற்றிக் கொடுத்த அபிப்பிராயம் நூற்றுக்கு நூறு உண்மையானதுதான்; ஒரு வருஷத்துக்கு முன்னால் வரையில் அது அவ்விதம் உண்மையாயிருந்தது. பம்பாய்க்குப் போய்த் திரும்பியதிலிருந்து சரஸ்வதி அம்மாளின் இயற்கையில் கோபதாபங்கள் அதிகமாகிக் கொண்டிருந்தன. லலிதாவைச் சிங்காரிப்பதிலும் அழகு படுத்துவதிலும் முன்னைக் காட்டிலும் பன்மடங்கு சரஸ்வதி அம்மாள் முனைந்தாள். இந்த முயற்சியில் லலிதாவுக்குக் கிடைத்த அடிகள், திட்டுக்களுக்குக் கணக்கே யில்லை. அதிலும் சீதாவின் பேச்சை லலிதா எடுத்து விட்டால், அன்று விடு அமர்க்களந்தான்! பலமுறை தலையில் பட்டுப் பட்டென்று குட்டுகள் விழுந்த பிற்பாடும் லலிதாவுக்கு மட்டும் புத்தி வரவேயில்லை. அத்தங்காள் சீதாவைப் பற்றி யாரிடமாவது ஏதாவது பெருமையடித்துக் கொள்ளாவிட்டால் அவளுக்கு அன்றிரவு தூக்கம் வராது; அப்படித் தூங்கினாலும் சொப்பனத்தில் அக்கிரகாரத்துப் பெண்களிடம் தன் பம்பாய் அத்தங்காளைப் பற்றி ஏதாவது சொல்லியே தீர்வாள்.

### ஆறாம் அத்தியாயம்

# மந்திராலோசனை

கிட்டா வய்யர் சாய்மான நாற்காலியி லிருந்து எழுந்தபோது கீழே விழுந்த கடிதத்தை எடுத்து நின்ற வாக்கிலேயே அதைப் பிரித்துப் படித்தார். பாதி படிக்கும்போதே, "சீச்சீ! இங்கிலீஷ் படித்தவர்களுக்கும் புத்தியே இருப்ப தில்லை. அதிலும் மதராஸில் குடியேறிவிட்டால், அவர்களுக்குத் தலைகால் புரிகிறதில்லை. எதை வேண்டுமானாலும் எழுதத் தோன்றுகிறது! அவ்வளவு கர்வம் பிடித்தவர்கள்!" என்றார்.

சரஸ்வதி அம்மாளுக்கு, "நீங்கள் இங்கிலீஷ் படிக்காவிட்டால் படித்தவர்களை எதற்காகத் திட்டுகிறீர்கள்?" என்று சொல்லத் தோன்றியது. ஆனாலும் 'மதராஸ்' என்றதும் அவளுடைய நினைவு வேறு பக்கம் திரும்பியது. கடிதத்தின் விஷயத்தை அறிந்துகொள்ளும் ஆவலினால் நாவை அடக்கிக் கொண்டாள். கிட்டா வய்யர் கடிதத்தை முழுதும் படித்த பிறகு, "கடிதம் யார் எழுதி யிருக்கிறார்கள்? என்ன எழுதி யிருக்கிறது?" என்று கேட்டாள்.

கிட்டா வய்யருக்குத் தம் மனைவி பேரில் ஏற்பட்டிருந்த அற்ப கோபம் இதற்குள் மாறி மதராஸ்காரர்கள் மீது திரும்பி யிருந்தது. ஆகையால் சரஸ்வதி அம்மாளின் கேள்விக்கு அவர் பதில் சொன்னார்.

"பழைய மாம்பலத்தில் இருக்கிறானே, ஒரு பிரகஸ்பதி. அவன்தான் எழுதி யிருக்கிறான். அவனுடைய புத்தி உலக்கைக் கொழுந்துதான்!"

"ஓகோ! உங்கள் சின்ன மாமா எழுதி யிருக்கிறாரா? என்ன எழுதி யிருக்கிறார்?" என்று சரஸ்வதி அம்மாள் கேட்டாள். அவளுடைய குரலில் பரபரப்பு அதிகமா யிருந்தது.

கிட்டா வய்யர் "பட்டணத்தில் பத்மாபுரத்தில் ஒரு நல்ல வரன் இருக்கிறது என்று சீமாச்சு சொன்னான் அல்லவா? சின்னமாமாவை விசாரிக்கச் சொல்லி யிருந்தேன். பையனுடைய தாயார் தகப்பனாரைப் போய்ப் பார்த்தானாம். அவர்கள் பெண்ணை அங்கே அழைத்துக் கொண்டு வந்து காட்ட வேண்டும் என்கிறார்களாம்! சுத்த அயோக்யப்பயல்கள்! மதராஸ்காரர்களுக்கே தலையில்மூளை இராதுபோலிருக்கிறது. சந்தைக்கு மாட்டைக்கொண்டு போவதுபோல் பெண்ணை அழைத்துக் கொண்டு போக வேண்டுமாம்! அப்படியாவது அவர்கள் பணம் கொடுத்து வாங்கிக் கொள்கிறார்களா? பெண்ணையும் கொடுத்து தட்சணையாகப் பணமும் கொடுக்க வேண்டுமாம்! மாட்டு வியாபாரம் தேவலை போலிருக்கிறது. அவர்கள்தான் அப்படிப் புத்தி யில்லாமல் சொன்னார்கள் என்றால், இவனுக்கு எங்கே புத்தி போயிற்று? சுத்த மடையன்! 'லலிதாவை இங்கே ஒரு தடவை அழைத்துக் கொண்டு வருவது நலம்' என்று எழுதி யிருக்கிறானே! நலமாம் நலம்! நலத்தை ரொம்பக் கண்டு விட்டான் இவன்!" என்று கிட்டா வய்யயர் சரமாரியாகப் பொழிந்தார்.

"இருந்தாலும் உங்களுக்கு இவ்வளவு கோபம் வரக்கூடாது. கோபம், பாவம், சண்டாளம் என்று நீங்களே அடிக்கடி சொல்வீர்களே? உங்கள் சின்ன மாமா அவ்விதமெல்லாம் யோசிக்காமல் எழுதப்பட்டவர் அல்ல. அப்படிக் குழந்தையை அழைத்துக் கொண்டு போனாலும் அவர்கள் வீட்டுக்கா நேரே போகப் போகிறோம்? உங்கள் சின்ன மாமா வீட்டிலேதான் போய் இறங்குவோம்? அங்கே வந்து பார்க்கச் சொன்னாலும் போயிற்று! இதற்காக நீங்கள் இவ்வளவு கோபித்துக் கொள்வானேன்?" என்று சரஸ்வதி அம்மாள் கிட்டாவய்யருக்குச் சாந்தஉபதேசம் செய்தாள்.

லலிதாவுக்கு நல்ல வரன் கிடைக்க வேண்டும் என்பதில் சரஸ்வதி அம்மாளுக்கு இருந்த ஆர்வம் சில சமயம் அவளை ரௌத்ராகாரம் கொள்ளச் செய்தது; சில சமயம் அபாரமான சாந்த குணத்தை மேற்கொள்ளும் படியும் செய்தது.

"அதெல்லாம் ஒருநாளும் முடியாத காரியம். கண்ட மூட்டாள் பயல்களுக்கு முன்னால் லலிதாவை அழைத்



துக் கொண்டு காட்டுவதா! அப்படி என்ன இப்போது வந்து விட்டது? இவன் இல்லா விட்டால் இன்னும் ஆயிரம் பேர். ஒரு தடிப்பயல் வந்து பெண்ணைப் பார்ப்பது, அப்புறம் வேண்டும், வேண்டாம் என்று சொல்வது,—இதுவே ஆபாசமான காரியம். பெண்களை அழைத்துக் கொண்டு போய்க் காட்டுவது என்பது மகா ரசாபாசமான விஷயம்!......"

சரஸ்வதி அம்மாள் குறுக்கிட்டு, "இப்போது என்ன குடி முழுகி விட்டது? எதற்காகக் கோபித்துக் கொள்கிறீர்கள்? எல்லாவற்றுக்கும் மேலக்கோடி வீட்டுக்காரரை யோசித்துக் கொண்டு தீர்மானம் செய்தால் போகிறது!" என்றாள்.

மேலக்கோடி வீட்டுக்காரர் என்று சரஸ்வதி அம்மாள் குறிப்பிட்டது சீமாச்சு வய்யரைத்தான். அவரைக் குறிப்பிட்டவுடனே கிட்டா வய்யரின் கோபம் அடங்கிவிடும் என்று அந்த அம்மாள் நன்கறிந்திருந்தாள். அவள் நினைத்தபடியே ஆயிற்று. கிட்டா வய்யர் உடனே சமையற் கட்டுக்குப் போய் அவசரமாய்ச் சாப்பிட்டுவிட்டு வெளிக் கிளம்பினார்.

* * *

மேலக்கோடி வீட்டுத் திண்ணையில் ஏற்கெனவே மூன்று பேர் தயாராகக் காத்துக் கொண்டிருந்தார்கள். சீமாச்சு வய்யர் என்கிற சீனிவாச அய்யர் கையில் சீட்டுக் கட்டுடன் உட்கார்ந்திருந்தார். பஞ்சு வய்யரும் அப்பாத்துரை சாஸ்திரிகளும் "சுதேசமித்திரன்" பத்திரிகையில் தலைக்கு ஒரு ஏட்டைப் பிரித்து வைத்துப் படித்துக் கொண்டிருந்தார்கள்.

கிட்டா வய்யர் வந்ததும் சாஸ்திரிகள் பத்திரிகையி லிருந்து தலை

யைத் தூக்கி, "ஐயர்வாள்! தெரியுமா சமாசாரம்? பீஹாரிலே பெரிய பூகம்பமாமே?" என்றார்.

பஞ்சு வய்யர், "அது என்ன அவருக்குத் தெரியுமா என்று கேட்கிறீர்? பூகம்பத்தை உண்டாக்கினதே அவர் தானே? 'லலிதா தபால் ஆபீஸுக்குப் போனால் பூகம்பமா வந்துவிடும்?' என்று அய்யர்வாள் சம்சாரத்திடம் சொல்லிக் கொண்டே யிருந்தாராம். அடுத்த நிமிஷம் சீமாச்சு 'பீகாரிலே பூகம்பம்' என்று சொல்லிக் கொண்டு உள்ளே சென்றாராம். பிராமணோத்தமரின் வாக்கு அந்தக்ஷணமே பலிதமாகி விட்டது!" என்றார்.

"ஒரு காலத்திலே பிராமணனுடைய வாக்குப் பலித்துக் கொண்டுதான் இருந்தது! இப்போது எல்லாம் தலைகீழாகிவிட்டது. நானுந்தான் கேட்கிறேன். அந்தப் பெண் குழந்தை தபாலாபீஸுக்குப் போகாவிட்டால் என்ன முழுகிப் போகும்? தபாலாபீஸுக்குப் போக அய்யர் வீட்டில் ஆள் இல்லையா, தேள் இல்லையா?" என்றார் சாஸ்திரிகள்.

சீமாச்சு ஐயர் குறுக்கிட்டு, "ஆள் இல்லாவிட்டாலும் தேள் நிறைய இருக்கிறது! சட்! சும்மா இருங்காணும்! லலிதா தபாலாபீஸுக்குப் போனதினால் என்ன முழுகிப் போய் விட்டது. அதைத்தான் சொல்லுமே? உலகம் எப்படியெல்லாம் முன்னேற்றம் அடைந்து கொண்டிருக்கிறது என்று உமக்குத் தெரியுமா? தினந்தினம் பத்திரிகை படிக்கிறதில் குறைச்சல் இல்லை!" என்றார்.

"பத்திரிகை படிச்சால் நமக்குச் சொந்தமாய் இருக்கிற புத்தி போய் விட வேணுமா, என்ன? நீங்கள் எல்லாம் முன்னேற்றம், பின்னேற்றம் என்று பேசப் போகத்தான் ஊரிலே பூகம்பம் வருகிறது!" என்றார் சாஸ்திரிகள்.

"நாம் இங்கே பேசுகிறதற்காகப் பூகம்பம் பீஹாரிலே வருவானேன்?" என்று கேட்டார் பஞ்சு வய்யர்.

"அந்த பூகம்பம் இங்கே வருவதற்கு எத்தனை நேரம் ஆகும்? பகவான் கிருபை செய்தால் அடுத்த நிமிஷம் இங்கேயே வந்துவிடுகிறது!"

"ராமராமா! பூகம்பம் வருகிறதற்குத்தானா பகவான் கிருபை செய்ய வேணும்?" என்றார் கிட்டா வய்யர்.

"பூகம்பம் வருகிறதோ, இல்லையோ மகாத்மா காந்தி நம்முடைய மாகாணத்துக்கு வரப் போகிறாராம்!" என்று சொல்லிப் பஞ்சுவய்யர் பத்திரிகையில் போட்டிருந்த கொட்டை எழுத்துத் தலைப்பைக் காட்டினார்.

"எதற்காக வருகிறாராம், தெரியுமா? கோயில்களை யெல்லாம் பஞ்சமர்களுக்குத் திறந்து விடுவதற்காக வருகிறாராம்! மகாத்மாக்களே இப்படிப் பட்ட காரியம் செய்தால் பூகம்பம் ஏன் வராது என்று கேட்கிறேன். பூகம்பம் மட்டுந்தானா வரும்? பூகம்பம், புயற்காற்று, பெரு மழை, பிரளயம், மகாப் பிரளயம் எல்லாந்தான் வரும். வந்து உலகமே அழிந்து போகும்!"

"ஓய்! சாஸ்திரிகளே! பஞ்சாதி சொல்கிற வாயினால் இப்படி எல்லாம் துர்வாக்குச் சொல்லாதீர்! ஏதாவது பலித்துவைக்கப் போகிறது!" என்றார் பஞ்சு வய்யர்.

"அந்த பயம் நமக்கு வேண்டாம். அப்பாத்துரை சாஸ்திரிகள் வாக்குப் பலிக்கிறதா யிருந்தால் இந்த ஊர் இப்படியா இருக்கும்? 'தீர்க்க சுமங்கலி பவா!' என்று இந்த மகான் எத்தனை பேருக்கு ஆசீர்வாதம் பண்ணி யிருக்கிறார்! அவருடைய ஆசீர்வாதம் பெற்றவர்கள் எல்லாரும் தீர்க்க சுமங்கலிகளா யிருக்கிறார்களா? இந்த ஊரில் மாஜி சுமங்கலிகள் தானே அதிகமா யிருக்கிறார்கள்?" என்று சீமாச்சு கிருதக்காகப் பேசினார்.

"இந்த வீண் வம்பு கிடக்கட்டும், சீமாச்சு! நான் உன்னிடம் ஒரு யோசனை கேட்பதற்காக வந்தேன்!" என்றார் கிட்டா வய்யர்.

"முன்னமே சொல்லி யிருக்கக் கூடாதோ? வா, உள்ளே போகலாம்" என்று சீமாச்சு சொல்ல, இருவரும் உள்ளே கூடத்துக்குச் சென்றார்கள்.

பம்பாயிலிருந்தும் மதராஸிலிருந்தும் வந்திருந்த கடிதங்களைப் பற்றிக் கிட்டா வய்யர் விவரமாகச் சொல்லி, "உன்னுடைய யோசனை என்ன?" என்று கேட்டார்.

சீமாச்சு வய்யர் யோசித்துத் தம்முடைய அபிப்பிராயத்தைக் கூறினார்.

# சர்வோதய சமாஜம்

வி. ஸ்ரீ. தியாகராஜன்.

சென்ற வாரம் சிறிதும் எதிர்பாராமல் சென்னையில் ஒரு நண்பருடைய சந்திப்பு ஏற்பட்டது. "இது என்ன, ரொம்ப அபூர்வமாக இருக்கிறதே! வெளியிலிருந்து தான் வருகிறீர்களா?" என்று கேட்டார்.

"இல்லை, சேவா கிராமத்திலிருந்து வருகிறேன்" என்றேன்.

"சேவா கிராமமா! அதற்குக் கிராண்ட் ட்ரங்க் எக்ஸ்பிரஸில் அல்லவா போக வேண்டும்? எத்தனை மணி நேரம் லேட்? நடுவில் நிஜாம் ராஜ்யத்தில் ஏதாவது தகராறு ஏற்பட்டதா?" என்று சற்றுப் பரபரப்புடன் கேட்டார்.

"நேற்று ஏதோ கடவுள் கிருபையால் இரண்டு மணி நேரம்தான் லேட். கூட்டம் தான் சகிக்க முடியவில்லை!" என்றேன்.

"மகாத்மா இல்லாத சேவா கிராமம் எப்படி இருக்கிறது?" என்றார்.

"மகாத்மா இல்லை யென்று யார் சொன்னது? சேவா கிராம ஆசிரமத்தில் அப்படி யாரும் நினைப்பதில்லை. அவர் இருந்த வீட்டைப் போய்ப் பாருங்கள். சாமான்களை யெல்லாம் அவர் இருந்த போது எப்படி எப்படி வைத்திருந்தார்களோ, அப்படி அப்படியே இன்றும் வைத்திருக்கிறார்கள். சமயம் நேரும் பொழுதெல்லாம் ஆசிரம வாசிகள் அவர் அறையில் ஒரு ஓரமாக உட்கார்ந்துகொண்டு நூல் நூற்கிறார்கள்" என்று சொன்னேன்.

"இதை யெல்லாம் பார்க்கக் கொடுத்து வைத்திருக்க வேண்டும். அந்த மகானைப் போல் இனிமேல் யார் பிறக்கப் போகிறார்கள்? கூட்டத்தில் என்ன நடந்தது? சொல்லுங்கள்!" என்றார் நண்பர்.

"மகாத்மாவின் இஷ்டப்படி தேச நிர்மாண வேலைகளைச் செய்து வரும் சமார் முந்நூறு ஊழியர்கள், தலைவர்கள் எல்லாரும் வந்திருந்தார்கள். ராஜன் பாபு தலைமை வகித்தார். பண்டித ஜவாஹர்லால் நேரு, மௌலானா அபுல்கலாம் ஆஸாத், ஆசாரிய கிருபளானி, சங்கரராவ் தேவ், பல மாகாண மந்திரிகள், கவர்னர்கள், மகாத்மாவிடம் நெருங்கிப் பழகிய பல பிரமுகஸ்தர்கள், கிராமங்களில் வேலை செய்து பத்திரிகைகளில் பெயர் அடிபடாத அநேக மௌன ஊழியர்கள் — இப்படியாகப் பெண்கள் உள்பட எல்லாரும் வந்திருந்தார்கள். முதலாவதாகச் 'சர்வோதய சமாஜம்' என்று ஒன்று ஏற்படுத்துவதாகத் தீர்மானித்தார்கள்" என்றேன்.

"இது என்ன ஸார், சர்வோதய சமாஜம்? புதிய பெயராக இருக்கிறதே!"

"பெயர் என்னமோ சற்று விசித்திரமான பெயர்தான். ஆனால் விஷயம் பழைய விஷயம் தான். 'காந்தி சமாஜம்' என்று பெயர் வைத்தால் ரொம்பப் பொருத்தமாகவும் நன்றாகவும் இருக்குமே என்று சிலர் சொன்னார்கள். ஆனால் ஆச்சாரிய வினோபா பாவே இதைப் பற்றிப் பேசுகையில், 'சர்வோதய சமாஜம் என்றால் பொருள் சுலபமாக விளங்காது என்பது உண்மையே. ஆதலால் இதைக் கேட்பவர்கள் 'அப்படி யென்றால் என்ன ஐயா?' என்று கேட்பது நிச்சயம். அப்பொழுது நாம் காந்திஜியின் கொள்கைகளை விவரமாக எடுத்துச் சொல்லிப் பிரசாரம் செய்யலாம். அப்படி யின்றி 'காந்தி சமாஜம்' என்றால் 'அதுதானே! காந்தி சமாசார மாக்கும்!' என்று தெரிந்த பாவனையில் போய்விடுவார்கள். நமக்கும் அவர்களிடம் இதைப் பற்றி விவரிக்கச் சந்தர்ப்பம் இல்லாமல் போய்விடும்' என்று சொன்னார். அதற்குமேல் யாரும் பெயரைப் பற்றி ஆக்ஷேபிக்க முன் வரவில்லை. ஆகவே 'சர்வோதய சமாஜம்' என்றே பெயர் வைத்து விட்டார்கள். ஆனால் இந்த சமாஜத்தின் ஸ்தாபன விவரங்கள் இன்னும் தீர்மானிக்கப்படவில்லை. அவற்றை யோசித்து ஏற்படுத்த ராஜன் பாபுவுக்கும், காந்திஜியின் சிஷ்யரும் காந்தி சேவா சங்கத்தின் பழைய தலைவருமான கிஷோரிலால் மஷ்ருவாலாவுக்கும் அதிகாரம் கொடுத்திருக்கிறார்கள். இந்த ஸ்தாபனத்தில் கட்டுப்பாடுகள் ஒன்றும் பலமாக இருக்காது; தலைவர் என்ற ஒருவரது கட்டளைகளை நிறைவேற்றுவது என்பது போன்ற விதிகள் இருக்காது. வருஷத்திற்கொரு முறை திருவிழா நடத்துவது என்பது இந்தச் சமாஜத்தின் முக்கிய அம்சமாக இருக்கும்" என்றேன்.

"அது என்ன திருவிழா?" என்று நண்பர் ஆர்வத்துடன் கேட்டார்.

"மகாத்மா மறைந்த தினமாகிய ஜனவரி மாதம் 30-ம் தேதியன்று தேசத்தின் பல பாகங்களிலும் உள்ள ஜனங்கள் கூட்டம் கூடி காந்தி பஜனை செய்து திருவிழாக் கொண்டாட வேண்டும் என்பது தான் கருத்து. இப்பொழுது பாருங்கள், மகாமகம், தைப்பூசம், பங்குனி உத்திரம் என்றெல்லாம் எத்தனையோ திருவிழாக்கள் நடக்க வில்லையா? அதே போலத்தான் ஒவ்வொரு வருஷமும் குறிப்பிட்ட அந்த ஜனவரி 30-ம் தேதியன்று மகா ஜனங்கள் ஏகமனமாக ஒன்று சேர்ந்து மகாத்மாவை நினைத்துக் கொள்ள வேண்டும். அவர் உபதேசித்த சன்மார்க்கத்தைக் கடைப் பிடிக்க விரதம் பூண வேண்டும்."

"ரொம்பவும் சிறந்த யோசனைதான். ஜவாஹர்லால் வந்திருந்தாரே, அவர் என்ன சொன்னார்?"

"என்னத்தைச் சொல்லுவது? 'இந்தப் பெரிய தேசத்தின் காரியங்களைச் சற்று நிம்மதியாக யோசிப்பதற்குச் சிறிதும் சௌகரியமில்லாம லிருக்கிறது. ஏனெனில், பல பிரச்னைகள் ஒன்றன்பின் ஒன்றாகத் துரிதமாக வந்துகொண்டே இருக்கின்றன. இப்படிப்பட்ட சமயங்களில் நாம் ஏதாவது பிழை செய்வது இயற்கையே. அந்தப் பிழைகளைப் பெரிது படுத்தாமல் காந்திஜியின் கொள்கைகளுக் கேற்றபடி நடந்துகொள்ள வேண்டும். எது எப்படியானாலும் என்னைக்கும் நான் உங்களோடு கூட இருப்பவன்தான்' என்று சொன்னார்."

"கூட்டம் மூன்று நாட்கள் நடந்ததாமே! இன்னும் என்னவெல்லாம் நடந்தது?"

"மூன்றாவது நாள் மாலை கூடிய சபையில், 'மகாத்மா ஆரம்பித்து நடத்தி வைத்த சர்க்கா சங்கம், தாலிமி சங்கம், ஹரிஜன சேவா சங்கம், கிராமக் கைத் தொழில் சங்கம், பசு சேவை சங்கம், ஹிந்துஸ்தானி பிரசார சபை முதலிய பல சங்கங்கள் ஒன்றோடொன்று தொடர்பில்லாமல் வேலை செய்வதை நிறுத்தி, ஒருமித்து, ஒரு நோக்குடனும் ஒத்துழைப்புடனும் வேலை செய்ய வேண்டும். அதற்கான யோசனைகளை ஸ்ரீ ஜே. ஸி. குமரப்பா ஒரு சிறு கமிட்டி கூட்டி அவர்களுடன் கலந்து சமர்ப்பிக்க வேண்டும்' என்று ஒரு தீர்மானம் நிறைவேறியது."

"இதைப்பற்றித் தலைவர்கள் என்ன சொன்னார்கள்?"

"இதைப்பற்றி ஆச்சாரிய கிருபளானி சொன்னது கவனிக்கத் தகுந்தது. 'இது வரையில் மகாத்மா ஆரம்பித்த இந்தச் சங்கங்களின் வேலைகள் எல்லாம் 'சுதந்திர தாகம் — விடுதலைப் போர்' என்ற பெரிய புரட்சிகரமான வேலையோடு இணைக்கப்பட்டிருந்தன. அதனால்தான் இவ்வேலைகளுக்கு இவ்வளவு மகத்வம் கொடுத்து வந்தோம். சுயராஜ்யம் வந்த பிற்பாடு இந்த வேலைகளுக்கு அதே மகத்வம் கொடுக்கப்பட வேண்டுமானால், அவற்றை இந்தக் காலத்துக்கு ஏற்ற வேறொரு புரட்சி வேலையோடு இணைக்க வேண்டும். அப்படிப்பட்ட புரட்சி ஒரு பெரிய சமூகப் புரட்சியாகத்தான் இருக்க முடியும்' என்று சொன்னார்!"

"நம்முடைய சகோதரிகள் ஒன்றும் பேசவில்லையா?"

"பேசாமலென்ன? மகாத்மா தம்முடைய நிர்மாண திட்டத்தில் சுமார் இருபது வேலைகளைக் குறிப்பிட்டிருக்கிறாரல்லவா? அவற்றை நிறைவேற்றுவதே சர்வோதய சமாஜத்தின் வேலை என்று தீர்மானிக்கப்பட்டது. இவைகளை ஒவ்வொன்றாகச் சொல்லிக் கொண்டு வரும்போது, 'ஸ்திரீகளுக்குச் சம அந்தஸ்து அளிப்பது' என்ற அம்சம் வந்தது. உடனே ஒரு இளநங்கை எழுந்திருந்து 'சம அந்தஸ்தை அளிப்பது யார், பெற்றுக் கொள்வது யார்? ஆண்களின் தயவினால் எங்களுக்கு ஆக வேண்டியது ஒன்றும் இல்லை. எந்த அந்தஸ்தையும் நாங்கள் யாரிடமும் பிச்சை கேட்கவில்லை. சம அந்தஸ்து எங்கள் பிறப்புரிமையல்லவா?' என்று ஒரு போடு போட்டாள். பிறகு வேறொரு அம்மாள் முன் வந்து, 'இந்த வீண் பேச்சு எல்லாம் எதற்கு? நாம் குழந்தைகளைப் பெறுகிறோமே — ஆண்களால் முடியுமா? உண்மையில் நம் உயர்ந்த அந்தஸ்தைப் பற்றி விவாதத்துக்கு இடம் ஏது?' என்றாள். கடைசியாக, 'இருபாலார்க்கும் சம அந்தஸ்து உண்டு' என்று திருத்தி யெழுதி முடிவு செய்யப்பட்டது."

"ஏன் ஸார், உங்களுக்கு ஹிந்தி நன்றாகத் தெரியுமோ?"

"நன்றாகத் தெரியாது. அதனால்தான் நான் மட்டுமென்ன, நம் தமிழ் நாட்டிலிருந்து வந்திருந்த சுமார் முப்பது நண்பர்களுக்கும் கூட்ட நடவடிக்கைகளில் பங்கு எடுத்துக் கொள்ள முடியவில்லை. ஒன்று மட்டும் நிச்சயமாக வைத்துக் கொள்ளுங்கள்; நாம் ஹிந்தி நன்றாகக் கற்றுக் கொள்ளாதவரையில் அகில இந்தியக் காரியங்களில் நம் அபிப்பிராயம் இடம் பெற முடியவே முடியாது" என்றேன்.



★

சென்ற மகாயுத்தத்தின் போது சுமார் எட்டு வருஷ காலம் இந்தியாவுக்கும் இந்தோசீனாவுக்கும் எந்தவிதமான தொடர்பும் இல்லாமலிருந்தது. இதனால் அங்கு வாழ்ந்து வந்த இந்திய மக்கள் பலவிதத்திலும் கஷ்டப்பட்டு வந்தனர். அவர்களுடைய கஷ்ட நஷ்டங்களை நேரில் சென்று அறிந்து வருவதற்காக இந்திய சர்க்கார் உதவியுடன் ஒரு நல்லெண்ண தூதுகோஷ்டி சென்றது. அந்த தூது கோஷ்டிக்கு ஸ்ரீ நாடிமுத்துப் பிள்ளை தலைமை வகித்தார். ஸ்ரீ பிள்ளை அவர்கள் அங்குள்ள பிரஞ்சு அதிகாரிகளைக் கண்டு இந்தியர்களுக்குள்ள குறைகளை எடுத்துக்கூறி இந்தியாவுக்கும் இந்தோசீனாவுக்கும் இடையே இருந்த நல்லுறவை மீண்டும் பலப்படுத்த வேண்டுமென்று வற்புறுத்தினார். அது மட்டுமின்றி அங்குள்ள இந்திய மக்களுக்கிடையே ஒற்றுமை நிலவுவதற்காக ''மகாத்மா காந்தி கிளப்'' என்று ஒரு சங்கம் ஆரம்பிக்க வேண்டியதின் அவசியத்தைப் பற்றியும் எடுத்துச் சொன்னார். அவருடைய வேண்டுகோளுக்கிணங்கி இதுவரை மேற்படி சங்கம் ஆரம்பிப்பதற்காக இரண்டரை லட்ச ரூபாய் வசூலாகி இருக்கிறது. இதற்காக சென்ற மார்ச்சு மாதம் ஏழாந்தேதி கூட்டப்பட்ட மகாநாட்டில் ஸ்ரீ நாடிமுத்துப் பிள்ளை பேசுவதைப் படத்தில் காணலாம். அவருக்கு அருகில் உட்கார்ந்திருப்பவர் இந்திய ஸ்தானாதிபதியான ஸ்ரீ ஏ. என். மேத்தா அவர்கள்.

★







# வள்ளி கேட்டவரம்

பகீரதன்

வழக்கம்போல் அன்றும் ஆற்றிலிருந்து நீர் எடுத்துக்கொண்டு, வள்ளி தன் வீட்டை நோக்கி நடந்தாள். "என்ன, வள்ளி!" என்ற கனிவான குரல் அவளுக்குப் பின்னாலிருந்து கேட்டது. அந்தப் பெண் ஒரு பதுமை திரும்புவது போல மெதுவாகத் திரும்பினாள். முருகன் நின்று கொண்டிருந்தான். ஒடிந்து விழுந்த கீடுப்போலிருந்த வள்ளியின் வாட்டமான தேகம் நாணத்தால் வளைந்தது; அவளது முகம் குபீரென்று சிவந்தது.

"இன்றைக்காவது உன் அப்பாவைக் கேட்டாயா?" என்றான் முருகன்.

"இன்னும் இல்லை" என்று சொல்வது போலத் தலையை அசைத்தாள் வள்ளி.

"ஏனும்?"

"........."

"வள்ளி! இப்படி நீ மௌனமாக இருப்பதைப் பார்த்தால் என்னைக் கலியாணம் செய்து கொள்ள உனக்கு இஷ்டமேயில்லை போலிருக்கிறது! — சரி, நான் போகிறேன்!" என்று சொல்லிவிட்டுத் திரும்பினான் முருகன்.

"இது என்ன, வழக்கம் இல்லாத வழக்கமாக இருக்கிறதே! நீங்கள் அல்லவா என் அப்பாவைக் கேட்க வேண்டும்?" என்றாள் வள்ளி.

"வள்ளி! எனக்கு அது தெரியாதா, என்ன? நான் உன் தகப்பனாரைப் பார்த்துக் கேட்பதாக இருந்தால் எப்பொழுதோ கேட்டிருக்க மாட்டேனா? நீயே முதலில் அவரிடம் ஜாடையாகப் பேச்சுக் கொடுத்துப் பார். அவருடைய அபிப்பிராயத்தைத் தெரிந்து கொண்டு வந்து என்னிடம் சொல்லு. பிறகு நான் நேரே வந்து அவரைக் கேட்கிறேன். என்ன, தெரிகிறதா?" என்றான் முருகன்.

வள்ளி சற்று நேரம் யோசித்துவிட்டு, "சரி" என்று சொன்னாள்.

இந்தச் சமயத்தில் யாரோ பின்னால் வரும் சத்தம் கேட்டது. "நாளைக்கு மீண்டும் சந்திப்போம்" என்று சொல்லி விட்டு இருவரும் பிரிந்தனர்.

அடுத்த நிமிஷம் "யார், வள்ளியா அது?" என்று கேட்டுக்கொண்டே வள்ளியின் தகப்பனார் மருதமுத்து வந்து நின்றான்.

"அப்பா, நீங்களா? நான் பயந்தே போனேன்!" என்றாள் வள்ளி.

"அது இருக்கட்டும், நீ இத்தனை நாழி யாருடனோ பேசிக்கொண்டிருந்தாயே, அவன் யார்?" என்று கேட்டான் மருதமுத்து.

தன் தகப்பனாரிடம் விஷயத்தைச் சொல்லுவதற்கு நல்ல சந்தர்ப்பம் கிடைத்திருப்பதை நினைத்து வள்ளி சந்தோஷப் பட்டாள். ஆனால் வாயிலிருந்து மட்டும் வார்த்தைகள் வரவில்லை. வள்ளி என்ன செய்வாள்?

"பயப்படாதே, வள்ளி! உண்மையைச் சொல்லுவதில் ஒரு தவறுமில்லை" என்றான் மருதமுத்து.

"அப்பா! எனக்கு அவர் மேலும் அவருக்கு என் மேலும் எப்படியோ ஆசை உண்டாகிவிட்டது. தினந்தோறும் இதே இடத்தில்தான் நாங்கள் சந்தித்துப் பேசிக் கொண்டிருப்போம். நான் தண்ணீர் குடத்தை எடுத்துக்கொண்டு இங்கு வருவதற்கு முன்னாலேயே எனக்காக அவர் வந்து காத்துக் கொண்டிருப்பார். சில நாளைக்கு நான் ஆற்றுக்கு வரமுடியாது போனதெல்லாம் வீட்டிலே எனக்கு இருப்புக் கொள்ளாது. பைத்தியம் பிடித்ததுபோல இருக்கும்......"

"...அதனால்தான் காலையில் எழுந்தவுடன் குடத்தை எடுத்துக்கொண்டு நீ ஆற்றுக்குக் கிளம்பி விடுகிறாயோ?" என்று கிழவன் கேலியாகக் கேட்டான்..

வள்ளி வெட்கம் தாங்க முடியாமல் அங்கிருந்த அரச மரத்தை அண்டினாற்போல நின்று பார்த்

தான். இரண்டு பச்சைக் கிளிகள்—ஆணும் பெண்ணுந்தான்—ஒரு கிளையில் உட்கார்ந்து ஏதோ இன்பக் கதைகள் பேசிக் கொண்டிருந்தன.

“இந்தக் கிளிகள் மாதிரி நீங்களும் தினம் தினம் இங்கே கூடிப் பேசிக் கல்யாணம் செய்துகொள்வது என்று தீர்மானித்திருக்கலாக்கும்!” என்றான் மருதமுத்து சிரித்துக்கொண்டே.

“ஆமாம்” என்று சொல்லுவதுபோலத் தலையை மட்டும் அசைத்தாள் வள்ளி.

“அந்தப் புண்ணியவான் பெயர் என்னவோ?” என்று கேட்டான் கிழவன்.

“அடுத்த தெருவிலே இருக்கும் காட்டாமைக்காரரு மகன் முருகன்தான், அப்பா!”

“காட்டாமைக்காரரு மகன்தான்!” என்ற வார்த்தையைக் கேட்டதும், மருதமுத்துவின் தலையில் பேரிடி விழுந்தது போலிருந்தது. “வள்ளி! இதுவரை நான் கட்டிக்கொண்டு வந்த மனக் கோட்டையை ஒரே கொடியில் தகர்த்து விட்டாயே! இந்த உலகத்தில் எத்தனையோ இளைஞர்கள் இருக்கிறார்களே, அவர்களில் உனக்குப் பிடித்த ‘முருகன்’ ஒருவனுமில்லையா?” என்று பிரமை பிடித்தவன்போலக் கேட்டான்.

இதைச் சற்றும் எதிர்பாராத வள்ளி ஒன்றும் புரியாமல் தவித்தாள்.

“வள்ளி! நீ முருகனைக் கலியாணம் செய்துகொள்வது என் மனதுக்குப் பிடிக்காத காரியம். அதற்குக் காரணம் என்னவென்று உனக்குத் தெரிய வேண்டுமானால், நீ என் கதையைக் கேட்டாக வேண்டும். சொல்கிறேன், கேட்கிறாயா? இந்தக் கதையைக் கேட்ட பிறகு, நீ என்ன செய்ய வேண்டுமோ அதைச் செய்!” என்று கூறிவிட்டு மருதமுத்து கதையை ஆரம்பித்தான்.

★

நாற்பது வருஷங்களுக்கு முன்னால் அது நடந்தது. அப்போது எனக்கு வயது இருபது இருக்கும். என்னைவிட என் அண்ணுவுக்கு இரண்டு வயது அதிகம். சுந்தரம் என்றால் சுந்தரந்தான். அவ்வளவு அழகாக இருப்பார். நம் தெருவிலே ஜோஸியர் வீடு இருக்கிறதே, அந்த வீட்டில் அப்பொழுது நிஜமாகவே ஒரு ஜோஸியர் இருந்தார். ஜோஸியர் சோமசுந்தரத்தை இந்த வட்டாரத்தில் தெரியாதவர்களே கிடையாது. அவருக்கு ஒரு பெண் இருந்தாள். ரொம்பவும் தங்கமான குணம்; பெயரும் தங்கந்தான். தங்கமும் சுந்தரமும் தினம் ஒன்றாகவே பள்ளிக்கூடம் போவார்கள். எங்காவது சுந்தரத்தைப் பார்த்தால் அங்கு தங்கத்தையும் பார்க்கலாம்.

“அவர்களுடைய சிறுபிள்ளைச் சிநேகம் கடைசியில் விபரீதமாக வந்து முடிந்தது. கதையை வீணாக வளர்த்துவானேன்? உன் பெரியப்பா—அவர்தான் சுந்தரம்—‘தங்கத்தைத் தாலி கட்டினால்தான் ஆச்சு’ என்று பிடிவாதம் பிடித்தார். எங்கள் தகப்பனாரும் ஜோசியர் சோமசுந்தரத்தைப் போய்ப் பார்த்துப் பெண் கேட்டார். தானே வரும் செல்வத்தைக் காலால் உதைப்பார் உண்டா? அவரும் ‘சரி’ என்று ஒத்துக் கொண்டார்.

“இது தங்கத்தின் தாய் மாமன் தங்கவேலுவுக்குத் தெரிந்துவிட்டது. ‘தங்கத்தைத் தாலி கட்டும் உரிமை எனக்குத்தான்!’ என்று அவன் தன் மாமாவிடம் வந்து வாதமிட்டான். ஜோஸியர், ‘அதெல்லாம் முடியாது!’ என்று கண்டிப்பாய்ச் சொல்லிவிட்டார்.

“தங்கவேலுவுக்குப் பரிந்துகொண்டு இந்த ஊர் ஜனங்கள் எல்லோரும் பேசினார்கள். ‘முறைகாரன் தங்கவேலு இருக்கும்போது நீ எப்படி சுந்தரத்துக்குத் தங்கத்தைக் கொடுக்கலாம்?’ என்று அவர்கள் ஜோசியரைக் கேட்டார்கள். ‘தங்கவேலுவுக்கும் தங்கத்துக்கும் பொருத்தம் சரியாக இல்லை’ என்று ஜோசியர் சொன்னார். ‘மாமன் மகளைக் கலியாணம் செய்துகொள்ளப் பொருத்தம் ஒன்றும் வேண்டியதில்லை. மாமன் மகள் என்ற பொருத்தமே போதும்’ என்று சொல்லி, ஊரார் ஜோசியரைப் பேசவிடாமல் செய்துவிட்டார்கள். அவர்களை விரோதித்துக் கொண்டு சோமசுந்தரம் என்ன செய்ய முடியும்? ஊரோடு ஒத்து தங்கவேலுவுக்குத் தங்கத்தைக் கொடுக்க இசைந்துவிட்டார்.

“தங்கவேலுவின் வீட்டிலே கலியாணத்துக்காக ஏக தடபுடல் செய்திருந்தார்கள். ஊரே



திரண்டு வந்து தங்கவேலுவின் வீட்டில் கூடியிருந்தது. வள்ளி! மேலே என்னத்தைச் சொல்ல? சுந்தரம் — என் அருமை அண்ணன் — என்னிடம் கூடச் சொல்லிக் கொள்ளாமல் இந்த ஊரை விட்டே போய்விட்டார். அவர் எங்கே போனார் என்று இன்று வரை தெரியவில்லை!" என்று சொல்லி விம்மி விம்மி அழ ஆரம்பித்து விட்டான் மருதமுத்து.

சிறிது நேரம் கழித்துத் தன் கண்களைத் துடைத்துக் கொண்டு, அவன் கதையை மீண்டும் ஆரம்பித்தான்:

"திடீரென்று கல்யாண வீட்டில் ஒரு பரபரப்பு ஏற்பட்டது. 'தங்கத்தைக் காணோம், தங்கத்தைக் காணோம்' என்று ஊரெல்லாம் தேடிக்கொண்டிருந்தார்கள். இந்த ஊருக்குப் புத்தி சொல்லுவதுபோல — ஊருக்கு என்ன, உலகத்துக்கே புத்தி சொல்லுவதுபோல—மணமாலை சூடி மகிழ வேண்டிய தங்கம், பிணமாலை சூடிப் பிள்ளையார் கோவில் கிணற்றிலே செத்துக் கிடந்தாள்!"

"தங்கம் செத்து விட்டாளா!" என்று தன்னையும் மீறிக் கேட்டுவிட்டு, ஒரு நீண்ட பெருமூச்சு விட்டாள் வள்ளி.

மருதமுத்து மௌனமாக இருந்தான். "ஆமாம், இந்தக் கதைக்கும் முருகனுக்கும் என்ன அப்பா, சம்பந்தம்?" என்று கேட்டு, தன் தந்தையின் மௌனத்தைக் கலைத்தாள் வள்ளி.

"சம்பந்தமா! அவர்களை மனம்போல் வாழ முடியாமல் செய்த பாவி தங்கவேலு இருக்கிறானே, அவனுடைய மகன்தான் முருகன். என்னுடைய அருமை அண்ணனை வீட்டை விட்டு—ஏன், இந்த ஊரை விட்டே துரத்திவிட்ட பாவியின் பிள்ளைக்கா உன்னைக் கலியாணம் செய்து கொடுப்பது? என் மனம் ஒருகாலும் இதற்குச் சம்மதிக்காது, அம்மா!" என்று ஆவேசம் வந்தவன் போல் சொல்லி முடித்தான் மருதமுத்து.

★

அன்று இரவு வள்ளிக்குத் தூக்கமே பிடிக்கவில்லை. அவள் மனதிலே பெரும் புயல் வீசிக் கொண்டிருந்தது. மருதமுத்து மட்டும் நன்றாகத் தூங்கிக்கொண்டிருந்தான். அவனை ஒருதரம் ஏற இறங்கப் பார்த்தாள் வள்ளி. பிறகு முற்றத்துக்கு வந்து பால் போல் எரித்துக் கொண்டிருந்த நிலாவைப் பார்த்தாள். எத்தனை நாழி அந்த நிலாவைப் பார்த்துக் கொண்டிருந்தாளோ தெரியவில்லை; அப்படியே முற்றத்தில் படுத்துக் கொண்டு அயர்ந்து தூங்கிவிட்டாள்.

சிறிது நேரத்துக்குப் பிறகு, திடீரென்று "ஐயோ, முருகா!" என்று ஓரே அலறலாக அலறிக்கொண்டே எழுந்து உட்கார்ந்தாள் வள்ளி. "என்ன அம்மா?" என்று கேட்டுக்கொண்டே மருதமுத்து எழுந்து ஓடி வந்தான்.

"ஒரு பயங்கரக் கனவு, அப்பா! நான் வழக்கம்போல ஆற்றுக்குத் தண்ணீர் எடுக்கப் போனேன். என்னைப் பார்ப்பதற்காக அரசமரத்து வேரில் முருகன் உட்கார்ந்திருந்தார். 'என்ன வள்ளி! உன் அப்பாவைக் கேட்டாயா?' என்று கேட்டார். 'கேட்டேன்!' என்றேன். 'என்ன சொன்னார்?' என்று கேட்டார். நீங்கள் சொன்ன கதையை அப்படியே அவரிடம் சொன்னேன். 'அப்படின்னா என்னைக் கலியாணம் செய்து கொள்ள மாட்டேன் என்று சொல்லு' என்றார். 'ஆமாம்' என்றேன். நான் அப்படிச் சொன்னதுதான் தாமதம்; 'இந்த உலகத்தில் எனக்கு இனி வேலை இல்லை' என்று சொல்லிக்கொண்டே வேகமாகப் போனார். எனக்கு மனசு கேட்கவில்லை. பின்னாலேயே போனேன். நான் என்ன சொல்வேன், அப்பா! 'மடார்' என்று ஒரு சத்தம் கேட்டது. அங்கிருந்த பனை மரம் ஒன்று முறிந்து அவர் தலையிலே விழுந்துவிட்டது. நான் 'ஹோ!' என்று அலறிவிட்டேன்!"

"வள்ளி! இதெல்லாம் வெறும் கனவு! நான்தான் முருகனை மறந்துவிடு என்றேனே, நீ ஏன் அவனையே நினைத்துக் கொண்டிருக்கிறாய்? பேசாமல் படுத்துக் கொள்!" என்று சொல்லி வள்ளியைச் சமாதானப் படுத்தித் தூங்கவைத்து விட்டு, மருதமுத்து படுத்துக்கொண்டான்.

அவனுக்கும் அன்று அதற்கு மேல் தூக்கம் பிடிக்கவில்லை. 'வள்ளியிடம் ஏன் இந்தக் கதையைச் சொன்னோம்? நிஜமாகவே முருகன் ஊரைவிட்டு ஓடி விடுவானோ? அப்புறம் தங்கத்தைப் போலவே வள்ளியும்......சீச்சீ! இதெல்லாம் என்ன நினைப்பு!' என்று பலவாறு எண்ணி எண்ணி அவன் வேதனைப்பட்டான். அவன் மனதிலே பெரிய போர் மூண்டது. அந்தப் போரில் அவனுடைய கண்கள் கலந்து கொண்டனவோ என்னவோ, அவை சிறிது நேரத்துக்கெல்லாம் தானாகவே மூடிக்கொண்டு விட்டன!

நல்ல தூக்கத்தில் வள்ளி வந்து அவனை எழுப்பினாள்.

"ஏன் வள்ளி! மறுபடியும் ஏதாவது கனவு கண்டாயா, என்ன?" என்று கேட்டான் மருதமுத்து.

"அதெல்லாம் ஒன்றுமில்லை, அப்பா! நீங்கள் எனக்கு ஒரு வரம் தர வேண்டும்?"

"என்ன வரம்?"

"நான் முருகனைக் கலியாணம் செய்து கொள்ள வேண்டும்."

கிழவனுக்குத் தர்மசங்கடமா யிருந்தது. அவன் என்ன பதில் சொல்லுவது என்று தெரியாமல் திகைத்தான். வள்ளி வெகு நேரம் அவன் முகத்தையே பார்த்துக் கொண்டிருந்தாள் — என்ன சொல்லப் போகிறாரோ, என்னவோ என்ற ஆவலுடன். கிழவன் வாயைத் திறக்கவேயில்லை. வள்ளிக்கு அலுத்துவிட்டது. "சரி, நீங்கள் இப்படியே எவ்வளவு நேரம் வேணுமானாலும் இருந்துகொண்டிருங்கள், அப்பா! நான் போகிறேன்!" என்று சொல்லிவிட்டு, அவள் வாசலை நோக்கி வேகமாக நடந்தாள்.

"வள்ளி! இந்த ராத்திரியில் எங்கு போகிறாய்?" என்று கேட்டுக்கொண்டே மருதமுத்து அவளைப் பின்தொடர்ந்தான்.

அடுத்த நிமிஷம் வள்ளி ஓட, அவளைப் பின்தொடர்ந்து மருதமுத்து ஓட இருவரும் ஓடிக்கொண்டே இருந்தார்கள். ஊருக்குக் கடைசியில் இருந்த பிள்ளையார் கோயில் வாசலிலே திடீரென்று நின்று வள்ளி கடவுளை வணங்கினாள். பிறகு, பரபரப்புடன் அருகிலிருந்த கிணற்றின் கைப்பிடிச் சுவரில் தாவி ஏறினாள். அப்புறம் என்ன? 'தங்கத்துக்குச் சாந்தி அளித்த கிணறே! என்னையும் ஏற்றுக்கொள்!' என்று சொல்லிக் கொண்டே 'தொப்' பென்று கிணற்றில் குதித்து விட்டாள்!



"ஐயோ, வள்ளி! என்ன காரியம் செய்தாய்? கொஞ்சம் பொறுத்திருக்கக் கூடாதா?" என்று கதறினான் மருதமுத்து.

அவனுடைய கதறலைக் கேட்டு, "என்ன, அப்பா! என்ன, அப்பா!" என்று கேட்டுக் கொண்டே முற்றத்திலிருந்து எழுந்து ஓடோடியும் வந்தாள் வள்ளி.

திருதிரு வென்று விழித்துக்கொண்டு படுக்கையை விட்டு எழுந்து உட்கார்ந்தான் கிழவன். அவன் உடலெல்லாம் வியர்த்திருந்தது. இப்பொழுது நடந்ததெல்லாம் வெறும் கனவுதான் என்று அறிந்ததும் அவனுக்கு ஓரளவு ஆறுதல் ஏற்பட்டது. ஆயினும் பீதி நிறைந்த கண்களுடன் "வள்ளி!" என்றான்.

"ஏன், அப்பா?"

"பொழுது விடிந்ததும் நீ ஆற்றுக்குப் போவாயா?"

"போவேன், அப்பா!"

"முருகன் வருவானா?"

"வருவார், அப்பா!"

"சரி, காலைக்கு நானும் வருகிறேன். நீ அவனிடம் சொல்லுவதற்குச் சிரமப்படுவாய்; நானே சொல்லிவிடுகிறேன்!" என்றான் மருதமுத்து.

வள்ளி புன்னகை பூத்தாள்.



மறு நாள் காலை, "யாரு, முருகனா?" என்ற மருதமுத்துவின் குரல் கேட்டுத் திரும்பிப் பார்த்தான் முருகன். அவனுக்கு ஆச்சரியம் தாங்கவில்லை; விழித்தது விழித்தபடி நின்றான்.

"முருகா! எல்லாவற்றையும் வள்ளி என்னிடம் சொன்னாள். என் மகள் எந்தவிதத்திலாவது சந்தோஷமாக இருக்க வேண்டும் என்பதுதான் என் ஆசை. உன் அப்பாவிடம் சொல்லி உடனே கலியாணத்துக்கு வேண்டிய ஏற்பாடுகளைச் செய்யச் சொல்லு!" என்றான் மருதமுத்து.

அவ்வளவுதான்; உணர்ச்சி மிகுதியினால் என்ன செய்கிறோம் என்பதையே மறந்து, இடுப்பில் இருந்த குடத்தைத் தூக்கிப் போட்டுவிட்டு, "அப்பா!" என்று கத்திக் கொண்டே தன் தந்தையின் கழுத்தைக் கட்டிக்கொண்டாள் வள்ளி.

அதே சமயத்தில் "அப்பப்பா!" என்று அலறிக் கொண்டே தன் காலைப் பிடித்து விட்டுக் கொண்டான் முருகன். அவன் காலிலே விழுந்த குடம் அவனுடைய வேதனையைக் கொஞ்சமும் லட்சியம் செய்யாதது போல 'டக்கு, டக்கு, டக்கு' என்று உருண்டு கொண்டே சென்று ஆற்றில் விழுந்தது!

# மாயவரம் லக்ஷ்மண சாண்டோ

ஏ. என். ராமரத்தினம்

"அலகாபாத்திலிருந்து வந்த சாமியார் ஒருவர் சென்னையில் பன்னிரண்டு மணி நேரம் பூமிக்குள் இருந்துவிட்டு வெளியே வந்தார்!" என்ற செய்தியைப் பத்திரிகைகளில் படித்தபோது நான் ஆச்சரியப்படவில்லை. ஏனெனில், தமிழ் நாட்டிலேயே அத்தகைய சாதகம் உள்ள ஒருவர் இருப்பது எனக்குத் தெரியும். இந்தச் செய்தியைப் பத்திரிகைகளில் பார்த்தவுடனே மாயவரம் ஸ்ரீ லக்ஷ்மண சாண்டோ சவால் விடுப்பாரென்றும் எனக்குத் தெரியும். நான் எதிர்பார்த்ததும் வீண் போகவில்லை; இரண்டு நாட்களுக்கெல்லாம் லக்ஷ்மண சாண்டோவிடமிருந்து கடிதம் வந்துவிட்டது. "அலகாபாத்திலிருந்து யாரோ சாமியார் சென்னைக்கு வந்து ஹடயோகம் செய்தாராமே! இதற்குச் சாமியார்தான் வேண்டுமோ? உங்களையும் என்னையும் போன்ற குடும்பஸ்தர்கள்கூட இதைச் சாதகம் செய்ய முடியுமே! பன்னிரண்டு மணி நேரம் பூமிக்குள் இருப்பது ஒரு பெரிய பிரமாதமில்லை. நான் எழுபத்திரண்டு மணி நேரம் — அதாவது, மூன்று பகல், மூன்று இரவு — பூமிக்குள் இருப்பேன்!" என்று எழுதியிருந்தார்.

சில வருஷங்களுக்கு முன்புவரை மாயவரம் லக்ஷ்மண சாண்டோ தேகப் பயிற்சியிலேயே கவனம் செலுத்திக் கொண்டிருந்தார். இளம் வயதில் தம் மார்பு மீது யானையை ஏற்றிக் கொள்ளுதல், மோட்டாரை நிறுத்துதல், மூன்று டன் நிறையுள்ள ரோலரை ஏற்றிக் கொள்ளுதல் போன்ற அதிசயப் படும்படியான காரியங்களைச் செய்து காட்டி, அவர் எல்லாரையும் பிரமிக்கச் செய்தார். அதோடு கத்திச் சண்டை, குத்துச் சண்டை, சிலம்பச் சண்டை போன்ற தமிழ்நாட்டுக் கசரத்துகளில் நல்ல தேர்ச்சி பெற்றவர். 'கரளாக் கட்டை' சுழற்றுவதில் லக்ஷ்மண சாண்டோவுக்கு நிகர் லக்ஷ்மண சாண்டோதான்!

சமீப காலத்தில் சாண்டோவுக்கு அம்மை நோய் கண்டு, ஆள் பிழைப்பதே அரிது என்று ஆகிவிட்டது. அதற்குப் பிறகு சாண்டோ தமது முரட்டுப் பயிற்சிகளைச் சற்றுக் குறைத்துக் கொண்டு ஹடயோக சாதகத்தில் இறங்கினார். இருந்தாலும் அம்மை நோய் கண்ட பிறகு அவரது உடல் நிலை சரியாக இல்லை. ஆகையால், அவர் பதின்மூன்று மணி நேரம்தான் ஹடயோகம் செய்யப் போவதாகச் சொன்னார்.

சென்ற மாதம் 21உ ஞாயிற்றுக்கிழமை மாலை ஏழு மணிக்கு மதுரை செஷன்ஸ் ஜட்ஜ் ஸ்ரீ கே. ஸ்ரீனிவாஸன் ஐ. ஸி. எஸ். முன்னிலையில் மாயவரம் லக்ஷ்மண சாண்டோ ஹடயோக சமாதியில் இறங்கினார். பூமிக்குள் நாலு அடி ஆழம் உள்ள ஒரு குழியில் ஸிமெண்டினால் தொட்டிபோல் கட்டியிருந்தார்கள். சாண்டோ அதில் உட்கார்ந்து கொண்ட பிறகு, அரை அங்குல கனமுள்ள பலகையைப் போட்டு அதன்மீது ஒரு சாண் உயரத்துக்கு மண்ணைத் தள்ளிக் குழியை நன்றாகக் காற்றுப் போக முடியாமல் மூடிவிட்டார்கள். இரவு பூராவும் அந்த இடத்தைச் சுற்றிக் காவல் போட்டிருந்தது.



பதின்மூன்று மணி நேர சமாதிக்குப் பிறகு ஸ்ரீ லக்ஷ்மண சாண்டோ அவர்கள்

மறுநாள் திங்கட்கிழமை காலை எட்டு மணிக்கு — அதாவது, பதின்

மூன்று மணிநேரம் கழித்து — லக்ஷ்மண சாண்டோவின் சமாதி கலைக்கப்பட்டது. மேலே இருந்த மண்ணை அகற்றி விட்டுப் பலகைகளை எடுத்தபோது, குழிக்கு அருகில் யாரும் போக முடியவில்லை. அவ்வளவு நெருப்பு ஜ்வாலை வீசுவதுபோல் இருந்தது. சாண்டோவின் சிஷ்யர்கள் அவரை வெளியே தூக்கி ஒரு மேஜைமீது உட்கார வைத்து விசிறினார்கள். அலகாபாத் சாமியாரின் பிரக்ஞை தெளிவதற்கு அவருடைய தலையில் ஐஸ் வைத்துக் கட்ட வேண்டியிருந்தது. ஆனால், நமது தமிழ்நாட்டு சாண்டோவோ தாம் மூர்ச்சை தெளியும் வரையில் தம் அருகில் யாருமே வரக்கூடாதென்று சொல்லியிருந்தார். பத்து நிமிஷங்களுக்குள் மூர்ச்சை தெளிந்து ஒரு கிளாஸ் ஆரஞ்சு ரசத்தைச் சாப்பிட்டார். சில நிமிஷங்களுக்குப் பிறகு சாண்டோ ஒலிபெருக்கியின் உதவியில்லாமலே உரத்த குரலில் பிரசங்கம் செய்தது எல்லோருக்கும் ஆச்சரியமாய்த்தானிருந்தது.

தம் வாழ்க்கையில் ஸ்ரீ லக்ஷ்மண சாண்டோவுக்கு ஒரே ஒரு ஆசைதான் இருக்கிறது. "சென்னை நகரில் ஒரு உடற்பயிற்சிக் கழகம் வைத்து நடத்தவேண்டும். வருஷத்தில் குறைந்த பட்சம் ஆயிரம் பேரையாவது நல்ல பலசாலிகளாக்க வேண்டும். தமிழ் நாட்டில் உள்ள எல்லாரும் நிமிர்ந்த மார்புடன் கம்பீரமாக நடக்க வேண்டும்" என்பதுதான் அந்த ஆசை. தேசம் சுதந்திரம் அடைந்துள்ள இந்தச் சமயத்தில் ஸ்ரீ லக்ஷ்மண சாண்டோ சென்னை நகரில் உடற்பயிற்சிச் சாலை ஆரம்பிப்பதை எல்லாரும் வரவேற்பார்கள்.

---

# காலக்ஷேபம்

---

### கிடைக்காதது!

காதலன்:—அன்பே, உனக்கு என் அன்புப் பரிசாக இந்த முத்து மாலையைத் தருகிறேன்!

காதலி:—நான் ஒரு கார் வேண்டும் என்றல்லவா வெகு நாட்களாகக் கேட்டுக் கொண்டிருக்கிறேன்? உங்களுக்கு ஞாபகமில்லையா?

காதலன்:—ஓ! பேஷாய் ஞாபகம் இருக்கிறது. கார் வாங்கலாம் என்றுதான் ரொம்பவும் முயன்று பார்த்தேன். ஆனால் 'இமிடேஷன்' கார் கிடைக்கவில்லையே!

★

### ஓகோ!

ஒருவர் (தபால் ஆபீஸில்):—ஸார், நான் ஸேவிங்ஸ் பாங்கியில் பணம் கட்ட விரும்புகிறேன். ஆனால் ஒரே ஒரு விஷயம் தெரிய வேண்டும். நாளைக்கே பணம் வேண்டும் என்றாலும் வாங்கிக் கொள்ளலாமா?

தபால் ஆபீஸ் குமாஸ்தா:—ஆகா, பேஷாய் வாங்கிக் கொள்ளலாம்! ஆனால் இரண்டு நாளுக்கு முன்னதாகவே எங்களுக்குத் தெரிவிக்க வேண்டும்!

★

### அப்படியா?

"நீ என் ஹோட்டலிலிருந்து சாப்பாடு தருவித்துச் சாப்பிடுகிறாய்?"

"என் மனைவி சமைக்கக்கூடாது என்று டாக்டர் சொல்லியிருக்கிறார்!"

"ஐயோ பாவம்! உன் மனைவிக்கு என்ன உடம்பு?"

"அவளுக்கு ஒன்றுமில்லை. எனக்குத்தான் தீராத வயிற்று வலி!"

### சிக்கனமா?

தகப்பனார் தம் மகனுக்குப் பார்சல் மூலம் ஒரு வெகுமதி அனுப்பினார். அத்துடன் ஒரு கடிதமும் வைத்திருந்தார்:—

"தம்பி, இந்தப் பார்சலில் இருக்கும் கோட்டு உனக்குப் பரிசாக அனுப்பப்பட்டிருக்கிறது. கோட்டைப் பார்த்ததும் நீ அதில் பொத்தான்களே இல்லையே என்று ஆச்சரியப்படுவாய். பொத்தான்கள் இருந்தால் பார்சலின் எடை அதிகமாகப் போய்விடும் என்று அவைகளைக் கத்திரித்து எடுத்து விட்டேன். ஆனால் கோட்டின் உள் பாக்கெட்டில் அவைகளைப் போட்டிருக்கிறேன்!"

★

### அவர் யோசனை!

வாங்குபவர்:—நீ இந்த ஜவுளிக்கடைக்குப் புதிதாக வேலைக்கு வந்தவன் போலிருக்கிறது.

புதிய பையன்:—உங்களுக்கு எப்படித் தெரியும்?

வாங்குபவர்:—துணி விலை சொல்லும்போதே உன் முகம் அசடு தட்டுகிறதே!

★

### சரிதான்!

நீதிபதி:—குற்றவாளி ஒரு ஸ்திரீ மாதிரி வேஷம் போட்டுக்கொண்டு போனான் என்று சொல்லுகிறாயே! அப்படியிருக்க அவன் ஆண் என்றும் திருடன் என்றும் உனக்கு எப்படிச் சந்தேகம் உண்டாயிற்று?

ஸா. இ. ப.:—அவன் நகைக்கடைப் பக்கம் சென்றபோது கடையைத் திரும்பிப் பார்க்காமலே போனான்!

# அண்ணாமலைப் பல்கலைக் கழகச்
# சித்திரைப் பள்ளிக்கூடம்

முன்னரே ஓரளவு உயர்தரப் பள்ளிக்கூடக் கல்வி கற்றுப் பல்கலைக் கழகக் கல்வி கற்கச் சந்தர்ப்பம் பெறாத மக்கள் பொருட்டு இப் பள்ளிக்கூடம் அண்ணாமலை நகரில் 6 வாரம் நடைபெறும். அதில் எல்லாப் பாடங்களும் தமிழிலே கற்பிக்கப்படும். ஆங்கிலம், தமிழிலக்கியம், உலக சரித்திரம், விஞ்ஞானம், அரசியல் நூல், பொருளாதார சாஸ்திரம் கணக்கு முதலியவை கற்பிக்கப்படும். வகுப்புகள் காலை 8 மணி முதல் 12 மணி வரை நடைபெறும். சாயங் காலத்தில் பந்தாடவும் தேகப்பயிற்சி செய்யவும் வசதிகள் அளிக்கப் படும். நடுத்தர வயதுடையவர்களும் வயது முதிர்ந்தவர்களும் பொது வறிவு பெறுவதற்கு இது ஒரு நல்ல சந்தர்ப்பம்.

தங்குவதற்கு ஹாஸ்டலில் இடம் கொடுக்கப்படும். போதனைக் காகக் கட்டணம் வசூலிப்பதில்லை. சாப்பாட்டுச் செலவு சுமார் ரூபாய் 20 ஆகலாம். இதை முன் பணமாகக் கொண்டுவர வேண்டும்.

மே மாதம் 10ம் தேதியிலிருந்து இப் பள்ளிக்கூடம் தொடங்கும். சேர விரும்புகிறவர்கள் உடனே விண்ணப்பம் பெற்றுப் பூர்த்தி செய்து கீழ்க்கண்ட விலாசத்திற்கு மே மாதம் 1-ம் தேதிக்குள் அனுப்பலாம்.

ரிஜிஸ்ட்ரார், அண்ணாமலை யூனிவர்சிட்டி,
அண்ணாமலைநகர்

# சோதனை

– ஸோமாஸ் –

கிருபா சமுத்திரத்தின் தகப்பனார் ஒரு பெரிய தீர்க்கதரிசியாயிருந்திருக்க வேண்டும் என்று அவருடைய நண்பர்கள் ஏக மனதாகத் தீர்மானித்திருந்தனர். தகப்பனார் தீர்க்கதரிசியாயில்லாவிட்டால் பிள்ளைக்கு அவ்வளவு பொருத்தமான பெயரை வைத்திருக்க முடியுமா? சாதாரணமாகப் பெயருக்கும் மனிதனுக்கும் பொருத்தமில்லாம லிருப்பதைப் பார்ப்பதுதான் சகஜம். ஆனால் கிருபாசமுத்திரம் அதற்கு நேர்மாறாக விளங்கினார்.

சிறு வயதிலிருந்தே அவர் இளகிய இருதயம் படைத்தவராயிருந்தார். அவருடைய தம்பிக்கு விளக்கெண்ணெய் புகட்டினால் அதைப் பார்க்க மனம் சகியாமல் அவர் 'ஓ'வென்று கதறுவாராம். விளக்கெண்ணெய் சாப்பிட்ட குழந்தையைச் சமாதானப் படுத்துவதைவிட அவரைச் சமாதானப் படுத்துவதுதான் மிகவும் சிரமமாயிருக்குமாம்.

கிருபாசமுத்திரத்துக்கு வயது வளர வளர அவரிடமிருந்த இரக்கமும் அநுதாபமும் வளர்ந்து கொண்டே வந்தன. வயதானதனால் அவரது உடல்தான் முற்றினதே தவிர, இருதயம் மிகவும் இளகிக் கொண்டே வந்தது.

இப்பொழுது கிருபாசமுத்திரம் உள்ளூர் ஜீவரக்ஷகப் பிரசார சபையின் தலைவர்; வாயில்லா ஜீவன்களின் வருத்த நிவாரண சபையின் ஆதரவாளர்; இலவச மிருக வைத்தியசாலையின் போஷகர்; கைதிகள் கஷ்ட நிவாரண நிதி சம்மேளனத்தின் காரணபூதர்; "ஜீவகாருண்யம்" என்னும் பிரபல பத்திரிகையின் கௌரவ ஆசிரியர்.

இப்படி மன்னுயிரைத் தன்னுயிர் போல் எண்ணி வந்த கிருபாசமுத்திரம் ஜீவகாருண்யத்தை வெறும் வாய் வேதாந்தமாகப் பேசி வரவில்லை. இயன்ற வரையில் செயலிலும் காட்டி வந்தார்.

சமையலுக்காக வாங்கி வரும் வாழைக்காய், வெண்டைக்காய், முருங்கைக்காய் முதலிய காய்களை அவர் மனைவி நறுக்கும்போது கிருபாசமுத்திரம் கண்ணால் பார்க்க மாட்டார். அடுப்பில் காய்கள் வேகும்போதும் கிருபாசமுத்திரம் பார்க்க மாட்டார்; அப்படி தற்செயலாகப் பார்க்க நேர்ந்தாலும் கிருபா சமுத்திரத்தின் கண்களிலிருந்து கண்ணீர் சமுத்திரமாய்ப் பெருகும். அவர் சாப்பிடும்போது மௌனமாகக் கண்களை மூடியபடிதான் சாப்பிடுவார். ஏனென்றால் கறி, கூட்டுகளைச் சுவைத்துச் சாப்பிடும்போது அவைகளைக் கண்ணால் பார்த்து விட்டால் 'கறிகாய்களும் உயிருள்ளவையல்லவா? அவைகளைத் தின்பதும் ஜீவஹிம்சையைச் சேர்ந்ததுதானே?' என்ற ஞாபகம் வந்து விடும். அப்புறம் சாப்பாடும் தடைப்பட்டுப் போகும்; அத்துடன் அவரது ஜீவகாருண்ய உணர்ச்சியின் கதி என்னவாகும்?

கிருபாசமுத்திரம் ரயில்வே ஆபீஸில் குமாஸ்தா வாகையால், ஆபீஸ் வேலை முடிந்த நேரங்களில் எல்லாம் அவர் ஜீவகாருண்யத் தொண்டு செய்வார்.

அதிகாலையில் சில தொண்டர்கள் புடைசூழப் பூந்தமல்லி ஹைரோடில் நின்று கொண்டு, ரஸ்தாவில் வருகிற போக்கு வண்டிகளையெல்லாம் நிறுத்தி மாடுகளின் கழுத்தைப் பிடித்துப் பார்ப்பார். கழுத்தில் புண்ணுள்ள மாடாயிருந்தால் அந்த வண்டிக்காரனுக்கு ஜீவகாருண்யத்தைப் பற்றி உபதேசிப்பார். புண்ணுக்கு மருந்து தருவார். இந்த வேலைகளெல்லாம் முடிந்தபிறகுதான் ஆபீஸுக்குப் போவார். விடுமுறை நாள் வந்து விட்டால் ஜீவகாருண்யத்தில் புத்தர் பிரானையும் தோற்கடித்து விடுவார்.

அன்றையதினம் கிருபாசமுத்திரம் ஆபீஸிலிருந்து நண்பர்களுடன் வந்து கொண்டிருந்தார். அப்பொழுது ஒரு நாயின் காலில் வண்டி ஏறிவிட்டது. 'வீல்' என்ற சத்தத்துடன் நாய் கிருபா சமுத்திரத்தின் பக்கமாக ஓடி வந்தது. இதைக் கண்ட கிருபாசமுத்திரத்தின் கிருபை நிறைந்த உள்ளம் பாகாய் உருகியது. உடனே அவர் ஓடி அந்த



நாயைக் கையிலே தூக்கிக் கொண்டார். தன் நன்றியைத் தெரிவிக்கும் பாவனையில் நாய் அவர் கையைக் கடித்து விட்டது. அந்த வலியையும் பொருட்படுத்தாமல் அந்த நாயின் காலைப் பரிசோதித்துப் பார்த்துத் தயாராய் உடன் கொண்டு வந்திருந்த மருந்தை ஊற்றிக் கட்டுப் போட்டார். கிருபா சமுத்திரத்தின் ஜீவகாருண்

யம் அத்துடன் நின்று விட வில்லை. அடிபட்ட நாயை மிருக ஆஸ்பத்திரியில் கொண்டுபோய்விட்டு அதற்கு வேண்டிய சிசுருஷைகளைச் செய்தார். தம் கையில் ஏற்பட்ட நாய்க் கடிக்கும் இன்ஜெக்ஷன் செய்து கொண்டு வீட்டுக்குப் போனார்.



கிருபாசமுத்திரம் நாயிடம் காட்டிய கருணையை அங்கே பக்கத்தி லிருந்த சிறு பையன் ஒருவன் பார்த்துக் கொண்டிருந்தான். அவனுக்கு வயது ஐந்து இருக்கும். கிருபாசமுத்திரத்தின் கருணை ததும்பும் முகமும், கனிவு ததும்பும் குரலும் அந்தப் பையனுக்கு அவரை நெருங்கும் அளவுக்குத் துணிச்சலைத் தந்து விட்டன. அவன் ஒரு அநாதை.

"அப்பா! அப்பா!!"

பையனின் குரலைக் கேட்டதும் கிருபாசமுத்திரம் சற்று நின்று திரும்பிப் பார்த்தார். அந்தப் பையனைக் கண்டதும் அவரது கருணை உள்ளத்தில் இன்னும் கருணை பொங்கியது.

"அப்பா, குழந்தை! நீ யார்? உன் அப்பா யார்?" என்று மிகவும் குழைவுடன் கேட்டார்.

"எனக்கு அப்பா இல்லை. நீதான் அப்பா!" என்றான் பையன்.

அவன் குரலில் அழுத்தமும் அன்பும் கலந்திருந்தன.

"அடேடே! இது யார் வீட்டுக் குழந்தையோ தெரியவில்லையே! இந்தா, பையா, ஓரணா! ஏதாவது வாங்கித் தின்றுவிட்டு வீட்டுக்குப் போ!" என்று கூறிக் கிருபாசமுத்திரம் ஓரணாக் காசை அந்தப் பையனிடம் கொடுத்து விட்டுத் தம் வீட்டை நோக்கி வேகமாகப் போகலானார்.

சுமார் இரண்டு பர்லாங்கு தூரம் நண்பர்களுடன் பேசிக் கொண்டே போயிருப்பார் கிருபாசமுத்திரம்.

"அப்பா!"

உடனே கிருபாசமுத்திரம் நின்றார்.

"இது என்ன, குழந்தை! இவ்வளவு தூரம் வந்து விட்டாயே! வீட்டுக்குப் போ!"

"நான் போகமாட்டேன், அப்பா! நான் உன் வீட்டுக்குத்தான் வருவேன்!"

"உன் வீட்டில் தேடப் போகிறார்கள்! போ, குழந்தை!"

"ஊஹூம்...நான் போக மாட்டேன், அப்பா!"



"நான் உன் அப்பா இல்லையடா? இது என்ன சங்கடம்! சொன்னால் கேளு! நீ சமர்த்தோ இல்லையோ!"

"ஊஹூம். நான் உன்னோடுதான் வருவேன்!"

கோபமே வராத கிருபாசமுத்திரத்துக்குக்கூட அந்தப் பையனின் பிடிவாதம் கோபத்தை உண்டாக்கியது.

"சொன்னால் கேட்க மாட்டாயா? போ, சமர்த்தாய் வீட்டுக்குப் போ! உன் வீடு எங்கே யிருக்கிறது தெரியுமா?" என்று குரலில் கொஞ்சம் கடுமையை வரவழைத்துக் கொண்டு கேட்டார்.

"எனக்கு வீடே கிடையாது, அப்பா! அதனால்தான் உன் வீட்டுக்கு வருகிறேன்!" என்று சொல்லிவிட்டு அந்தக் குழந்தை அழ ஆரம்பித்தான். கிருபாசமுத்திரத்தின் நண்பர்கள் சிரித்தனர். கிருபாசமுத்திரத்தின் இளகிய உள்ளம் அந்தக் குழந்தையை அவர் வீட்டு வரையில் அழைத்துப்போக இடங்கொடுத்தது.

"அப்பா! அப்பா! இதுதானா நம்ம வீடு?" என்று கேட்டான் குழந்தை.

கிருபாசமுத்திரத்தின் மனைவி குழந்தையின் குரல் கேட்டு வெளியே வந்தாள்.

"இது யார் குழந்தை?" என்று வியப்புடன் கேட்டாள்.

கிருபாசமுத்திரம், "இது யார் வீட்டுக் குழந்தையோ தெரியவில்லை. ஆபீஸிலிருந்து வரும்பொழுது என்னைப் பிடித்துக்கொண்டு விட்டான்!" என்றார்.

"அப்பா, ஏன் பொய் சொல்லுகிறாய்?" என்று கேட்டது குழந்தை.

அவ்வளவுதான்: அவர் சகதர்மிணியின் முகத்தில் ஒரு வீராங்கனையின் களை தாண்டவமாடியது.

"ஓகோ! அப்படியா சமாசாரம்! எத்தனை நாளாக இதெல்லாம்? இதற்காகத்தான் ஜீவகாருண்ய சங்கத்துக்குத் தினம் தவறாமல் போகிறீர்களாக்கும்! அடடா! என்ன கருணை!" என்று கோபமும் ஏளனமும் கலந்த ஒரு சிரிப்புச் சிரித்துச் சினிமாவில் வரும் காளியைப்போல் அவரை ஒரு வீரப் பார்வை பார்த்தாள்.

பாவம், கிருபாசமுத்திரம் வாயைத் திறவாமல் அலை ஓய்ந்த சமுத்திரம் போல் அசைவற்று நின்றார்.

அவர் மனைவி பதில் ஒன்றும் சொல்லவில்லை. ஆனால் அவள் கண்களில் நீர் ஆறாய்ப் பெருகிக்கொண்டிருந்தது.

கிருபாசமுத்திரம் அதற்குமேல் ஒன்றும் பேசவில்லை.

அந்த அநாதைப் பையனும் ஒன்றும் பேசாமல் சற்று நேரம் நின்றான். பிறகு, "அம்மா, அம்மா!" என்று கூப்பிட்டுக் கொண்டே கிருபாசமுத்திரத்தின் மனைவியிடம் போனான்.

"நான் உன் அம்மா இல்லை!" என்று அவள் எரிந்து விழுந்தாள்.

பையன் அவள் கழுத்தைக் கட்டிக் கொண்டு அழுதான். அவள் செய்வதறியாமல் தவித்தாள்.

"என்னை இவன் அப்பா என்று கூப்பிட்டபோது சண்டைக்கு வந்தாயே, இப்போது உன்னை அம்மா என்கிறானே! அதற்கு என்ன சொல்லுகிறாய்?" என்று கிருபாசமுத்திரம் சந்தர்ப்பத்தை நழுவ விடாமல் கேட்டார்.

"எல்லாம் விபரீதமாய்த்தான் இருக்கிறது! ஒரு வேளை இதுவும் உங்கள் போதனைதானோ என்னவோ! இந்தப் புருஷர்களைக் கொஞ்சமும் நம்பக்கூடாது எல்லாம் என் தலைவிதி! இத்தனை காலம் நயவஞ்சகமாக நீங்கள் என்னிடம் பேசியதையெல்லாம் நம்பினேனே!" என்று விசித்து விசித்து அழுது கண்ணீர் பெருக்கினாள் மனைவி.

கிருபாசமுத்திரம் அனலில் விழுந்த புழுவாய்த் துடித்துப் போனார்.

"பார்த்தாயா, என்னிடம் இத்தனை வருஷங்கள் பழகியும் என் வார்த்தையை நம்பமாட்டேன் என்கிறாயே! இப்பொழுதே இந்தக் குழந்தையை அநாதை ஆசிரமத்தில் விட்டுவிட்டு வந்து விடுகிறேன். ஜீவ ரக்ஷகப் பிரசார சபையிலிருந்தும் விலகிக் கொள்கிறேன். 'ஜீவகாருண்ய'த்தின் கௌரவ ஆசிரியர் பதவியையும் ராஜிநாமாச் செய்து விடுகிறேன். கொஞ்சம் கருணை வைத்து நீ இனியாவது என்னை நம்பு, போதும்! இனிமேல் சந்தேகப்பட மாட்டாயே?" என்று கேட்டுவிட்டுக் குழந்தையைத் தூக்கிக் கொண்டு கிருபாசமுத்திரம் புறப்பட்டு விட்டார்.

அவர் சகதர்மிணியின் கோபம் தணிந்தது; முகத்தில் ஒரு திருப்தி நிலவியது.

# குற்றாலத்தில் பாரதி அன்பர்கள்

சென்ற மார்கழி 27உ திருக்குற்றாலத்தில் ஐந்தருவிச் சாலை கலகலப்புடன் விளங்கியது. ரஸிகமணி ஸ்ரீ டி. கே. சிதம்பரநாத முதலியார் அவர்களின் இல்லத்தில் எட்டயபுரம் பாரதி மண்டபத் திறப்பு விழா வரவேற்புக் கமிட்டியார் கூடித் திறப்பு விழாவுக்கு மங்களம் பாடினார்கள்.

தூத்துக்குடி, கோவில்பட்டி, எட்டயபுரம், சங்கரன்கோவில், திருநெல்வேலி, அருப்புக் கோட்டை, புளியங்குடி, இலஞ்சி ஆகிய இடங்களிலிருந்து வரவேற்புக் கமிட்டி அங்கத்தினர் 42 பேர் கூட்டத்துக்கு விஜயம் செய்திருந்தார்கள். இவர்களைத் தவிர, திறப்புவிழா கைங்கர்யத்தில் ஈடுபட்டிருந்த பிரமுகர்கள், தொண்டர்படைத் தலைவர்கள் முதலியவர்கள் சுமார் 50 பேர் வந்திருந்தார்கள். வரவேற்பு சபையின் உபதலைவர் ஸ்ரீ ஏ. பி. சி. வீரபாகுப் பிள்ளை அவர்கள் கூட்டத்துக்குத் தலைமை வகித்தார். காரியதரிசி ஸ்ரீ சோமயாஜுலு திறப்புவிழா அறிக்கையையும் விவரமான வரவு செலவுக் கணக்கையும் சமர்ப்பித்தார். அறிக்கையும் கணக்குகளும் ஏகமனதாக அங்கீகரிக்கப்பட்டன.

பல ஊர்களிலிருந்தும் வந்த தொண்டர் படையினர் விழாவின்போது செய்த அரிய சேவையைப் பாராட்டி வரவேற்பு சபையார் தயாரித்திருந்த அத்தாட்சிப் பத்திரங்கள் தொண்டர் படைத் தலைவர்களுக்கு ஸ்ரீ டி. கே. சி. அவர்களால் வழங்கப்பட்டது.

"மண்டபத் திறப்பு விழாவின்போது சேவை செய்த அனைவருக்கும், சிறப்பாக வரவேற்பு சபையின் பொதுக் காரியதரிசி ஸ்ரீ சோமயாஜுலு அவர்களுக்கும் "கல்கி" ஆசிரியர் நன்றி செலுத்தினார்.

பாரதி மண்டபத்தைப் பராமரிப்பதற்கு எட்டயபுரத்தில் ஒரு சிறு கமிட்டி ஏற்படுத்தப் பட்டிருக்கிறதென்றும், கூடிய சீக்கிரத்தில் தமிழ்நாடு முழுவதிலும் அங்கத்தினர் கொண்ட "பாரதி சங்கம்" அமைக்கப் படுமென்றும், ஆண்டுதோறும் செப்டம்பர் 11உ பாரதியார் தினத்தில் எட்டயபுரத்தில் விழா நடத்தப்படும் என்றும் "கல்கி" ஆசிரியர் அறிவித்ததை அங்கே கூடியிருந்த பாரதி அன்பர்கள் உற்சாகமாக வரவேற்றுக் கரகோஷம் செய்தார்கள்.

மேற்படி வைபவத்துக்காக விஜயம் செய்திருந்த பாரதி அன்பர்கள் சுமார் நூறு பேருக்கு ரஸிகமணி டி. கே. சி. அவர்களின் இல்லத்தில் சிறப்பாக விருந்து அளிக்கப் பட்டது. வயிற்றுக்கு விருந்து ஆனபிறகு, ரஸிகமணி அவர்கள் செவிக்கு விருந்தும் அளித்தார்கள். பாரதியாரின்,

"வலிமையற்ற தோளினாய் போ போ போ!"

"ஒளிபடைத்த கண்ணினாய் வா வா வா!"

என்று தொடங்கும் பாடல்களை ரஸிகமணி அவர்கள் படிக்கவேண்டிய முறையில் படித்துக் காட்டிப் பாடல்களின் கருத்தையும் அற்புதமான முறையில் விளக்கினார்கள். பாடல்களைக் கேட்டவர்கள் எல்லாரும் குற்றாலத்தை விட்டுப் புறப்படும்போது வலிமை பெற்ற தோள்களுடனும் ஒளி படைத்த கண்களுடனும் புறப்பட்டுச் சென்றார்கள்.




பாலனின் வீடு ஒரு சிறிய காட்டை அடுத்தாற்போல் இருந்தது. அவனுடைய தகப்பன் ஒவ்வொரு நாளும் அந்தக் காட்டிலிருந்து விறகு வெட்டிக் கொண்டு வந்து, பக்கத்து ஊரில் விற்று வருவான். வழக்கம்போல் ஒரு நாள் விறகு வெட்டும் பொருட்டுக் காட்டுக்குச் சென்ற அவன் மாலையில் வீட்டுக்குத் திரும்பி வரவில்லை. அன்று போனவன் போனவன்தான்; அப்புறம் அவன் வீடு திரும்பவேயில்லை. காட்டில் தன் தகப்பனைத் துஷ்ட மிருகங்கள் தாக்கிக் கொன்றிருக்க வேண்டும் என்று பாலன் முடிவு கட்டி விட்டான்.

ஒரு வருஷம் கழிந்தது. ஒரு நாள் பாலனுக்கு நாவற் பழம் தின்னவேண்டும் என்ற ஆசை உண்டாயிற்று. பக்கத்துக் காட்டில் அனேக நாவல் மரங்கள் இருந்தன. ஒரு நாள் அதிகாலையில் அவன் எழுந்திருந்து, காட்டுக்குப் புறப்பட்டுச் சென்றான்.

பாலன் காட்டில் புகுந்து சிறிது தூரம் போயிருப்பான். அங்கே ஓர் அழகிய பஞ்சவர்ணக் கிளி கூண்டில் அடைபட்டிருந்தது. திகிலுடன் அங்கு மிங்கும் பார்த்து விழித்தவாறு இருந்த அந்தக் கிளி, பாலனைத் தூரத்தில் கண்டதும் சிறகைப் 'பட பட' வென அடித்துக்கொண்டு, "தம்பி, தம்பி! இங்கே வா!" என்று கூவியழைத்தது. விசித்திரமான குரலில் மனிதர்கள் போல் அவ்வளவு அழகாக அந்தக் கிளி பேசுவதைக் கண்டு பாலன் ஆச்சரியத்துடன் கிளிக் கூண்டுக்கு அருகில் சென்றான்.

"தம்பி, ஒரு பொல்லாத முரடன் கையில் நான் சிக்கிக் கொண்டேன். அந்த மனிதன் என்னை இங்கே இறக்கிவிட்டு, வழியில் தென்பட்ட ஒரு மானைத் தூக்கிக் கொண்டு ஓடியிருக்கிறான். அவன் திரும்புவதற்குள் என்னைச் சற்று வெளியே விட்டு விடேன்! இந்த உதவியை நீ செய்தால் கட்டாயம் உனக்கு நான் பிரதி யுபகாரம் செய்வேன். சீக்கிரம் என்னை விடுவித்து விடேன்!" என்றது.

பாலன் அதன் மேல் இரக்கம் கொண்டு உடனே கூண்டின் கதவைத் திறந்து விட்டான். அடுத்த வினாடி அந்த அதிசயக் கிளி 'விர்' என்று பறந்து போய் ஒரு மரக்கிளைமீது உட்கார்ந்து கொண்டு பாலனை நோக்கி, "தம்பி, என் உயிரை நீ காப்பாற்றினாய்; ரொம்ப சந்தோஷம். இன்று நீ போகும் வழியில் ஓர் அபூர்வமான பொருளைக் கண்டெடுப்பாய். அந்த வஸ்துதான் நான் உனக்குத் தரும் பரிசு. நீ போய் வா!" என்று கூறிற்று.

பாலன் மிகுந்த உற்சாகத்துடன் அங்கிருந்து கிளம்பினான். கொஞ்ச தூரம் சென்றதும், தரையில் 'பளபள' வென்ற ஏதோ ஒரு வஸ்து தென்பட்டது. பாலன் அதைக் கையில் எடுத்துப் பார்த்தான். அது ஒரு முகம் பார்க்கும் கண்ணாடியாகக் காணப்பட்டது. பிறகு, அந்தக் கண்ணாடியுடன் அவன் நடந்து சென்று நாவற் பழங்கள் சேகரிப்பதில் முனைந்தான்.

மனங்கொண்ட மட்டும் பழங்களைப் புசித்து விட்டு, மிகுந்ததை மூட்டையாகக் கட்டி வைத்துவிட்டு, நடந்த களைப்புத் தீர அவன் ஒரு மரத்தடியில் படுத்துத் தூங்க ஆரம்பித்தான். எவ்வளவு நேரம் அவன்

தூங்கினனே தெரியாது. திடீரென்று விழித்தெழுந்தபோழுது அவன் திடுக்கிட்டான். காரணம், அவன் அருகில் குரங்கு ஒன்று உட்கார்ந்திருந்தது தான்! அது சும்மாவும் உட்கார்ந்திருக்கவில்லை; அவன் மடியிலிருந்த கண்ணுடியை யெடுத்து வைத்துக் கொண்டு, தன் முகத்தின் அழகை அதற்குள் பார்த்துக்கொண்டிருந்தது!

பாலன் குரங்கைக் கண்டு விழித்துக் கொண்டிருக்கையில், திடீரென்று குரங்கு மறைந்தது. அது மட்டுமில்லை; அந்தக் குரங்கு உட்கார்ந்து கொண்டிருந்த இடத்தில் இப்போது பாலனின் தகப்பன் இருந்தான்! பாலனுக்குத் தன் கண்களையே நம்ப முடியவில்லை. காணமற் போன தகப்பனர் திடீரென்று தோன்றினல் ஆச்சரியமா யிருக்காதா, என்ன?

அப்பாவைக் கண்டதும் அவருடன் பேசவேண்டும் என்று பாலனுக்கு ஆசையாய்த்தா னிருந்தது. ஆனல் ஒரு வருஷத்துக்குப் பிறகு அப்பாவைத் திடீர் என்று பார்க்க நேர்ந்ததனல் அவனுக்கு என்ன பேசுவது என்றே புரியவில்லை. பாலனைப் போலவே அவன் தகப்பனுக்கும் ஆச்சரியம் தாங்க முடியாமல் இருந்தாலும் அவன் மௌனமா யிருந்து விடவில்லை.

"தம்பி, என்னைக் காணமல் இத்தனை நாளும் நீ ரொம்பவும் கவலைப்பட்டிருப்பாய். அன்று எனக்கு என்ன நேர்ந்தது என்பதைச் சொல்கிறேன். அன்று மாலை நான் விறகைச் சேகரித்துக் கொண்டு வீட்டுக்குக் கிளம்பிய பொழுது, இருட்டத் தொடங்கி விட்டது. ஆதலால் நான் வேகமாகவே நடந்து கொண்டிருந்தேன். வழியில் முட் புதர் ஒன்றில் ஒரு கிளி சிக்கிக்கொண்டு வெளியேற வகை தெரியாமல் தவித்துக்கொண்டிருந்தது. என்னைக் கண்டதும் அது மனிதர்களைப் போல் கூவி உதவிக்கு அழைத்தது.



ஆனல், அப்பொழுது நன்ருக இருட்டி விட்ட படியால் கிளியின் கூக்குரலைப் பொருட்படுத்தாமல் நான் மேலே நடந்து கொண்டிருந்தேன். அவ்வளவுதான், அடுத்த கணம் அந்தப் பொல்லாத கிளி ஆத்திரத்துடன் என்னைக் குரங்காக மாறும்படி சபித்து விட்டது. அந்தக் கிளியை நான் ஒரு சாமானியப் பறவையாக எண்ணி விட்டேன். அதனுல்தான் இவ்வளவு நாட்களாக நான் உன்னைப் பிரிந்திருக்கும்படி நேர்ந்தது!" என்று கூறி அவன் சற்று நிறுத்தினுன்.

உடனே பாலு, அன்று காலையில் தான் கண்ட கிளியின் வரலாற்றையும் தனக்கு அது உதவி செய்வதாக வாக்களித்ததையும் பற்றிக் கூறினுன்.

அந்த அதிசயக் கிளியின் நன்றியறிதலை எண்ணி யெண்ணி இருவரும் வியந்து கொண்டிருக்கையில், அங்கு மற்ருெரு அதிசயம் நிகழ்ந்தது. திடீரென்று அந்த அற்புதக் கண்ணுடி மறைந்து ஒரு தேவதை அங்கே தோன்றியது. தகப்பனும், மகனும் மறுபடியும் விஷயம் புரியாமல் தவித்தனர்.

தேவதை அவர்களை நோக்கிப் புன் சிரிப்புடன், "கிளி ரூபத்தில் உங்கள் முன்னுல் தோன்றியது நான்தான். பாலன் செய்த உபகாரத்திற்காக அவனுடைய தகப்பனை அவனுக்குத் திருப்பியளிக்க நான் நிச்சயித்தேன். மாறு ரூபத்தில் இருப்பவர்கள் அந்தக் கண்ணுடிக்குள் பார்த்தால், சுயரூபத்தை யடைந்துவிடுவார்கள் என்பதுதான் கண்ணுடியின் இரகசியம்!" என்று கூறி, அவ்விருவரையும் ஆசிர்வதித்துவிட்டு விடை பெற்றுக் கொண்டது.

பாலனின் சந்தோஷத்துக்குக் கேட்கவேண்டுமா? தனியாகக் காட்டுக்குச் சென்ற அவன் தன் தகப்பனுடன் உல்லாசமாக வீட்டுக் குத் திரும்பினுன்.

# மேனகையின் கணவன்

கி.ரா. கோபாலன்




இவர் ஒரு டாக்டர். ஒரு டாக்டருக்கு மனைவியாக இருந்து குடித்தனம் நடத்துவது எவ்வளவு கஷ்டம் என்பதை நான் சொல்ல வரவில்லை. எவ்வளவு கஷ்டங்கள் இருந்தால்தான் என்ன? உள் அந்தரங்கமான அன்பு இருந்தால்போதும். அவரோடு வாழ்க்கை நடத்துவதிலுள்ள சிரமத்தைச் சொல்லுவதைவிட அவரை நான் எப்படிக் கணவராய் அடைந்தேன் என்பதைச் சொல்லத்தான் விரும்புகிறேன்.

நான் என்னுடைய பள்ளிப் படிப்பை நிறுத்தியபோது எனக்கு வயது இருபத்திரண்டு. சாதாரணமாக ஒரு பெண்ணுக்கு இருபத்திரண்டு வயது வரை கல்யாணமாகாமலிருந்தால் இந்தக் காலத்தில் ஆச்சரியப் படுவதற்கு என்ன இருக்கிறது? ஒருவேளை என் தாயார் உயிரோடு இருந்திருந்தால் எனக்குப் பன்னிரண்டு வயதிற்குள் கல்யாணம் நடந்திருந்தாலும் நடந்திருக்கும். என் தகப்பனாரும் இந்த விஷயத்தில் கொஞ்சம் கால நிலையை அனுசரித்துப் போகக் கூடியவர். எனக்கு மேலும் படிக்க வேண்டுமென்ற ஆசை இருக்கத்தானிருந்தது. ஆனால் என் தகப்பனார் அதைக் கண்டிப்பாய் மறுத்து விட்டார்.

ராகவன் டில்லியில் ஏதோ அரசாங்க உத்தியோகத்தில் இருந்தார். அவர் என் தகப்பனாரோடு மிகவும் நெருங்கிப் பழகிய ஒரு சிநேகிதரின் குமாரன். நான் என்று பெண்ணாக ஜன்மமெடுத்தேனோ அன்றிருந்தே நான் அவருக்குத் தான் மனைவியாக வேண்டும் என்று எங்கள் குடும்பத்தில் எல்லோரும் தீர்மானம் செய்து விட்டனர். இறந்துபோன என் தாயார் தன் கடைசி மூச்சுப்போகும் தறுவாயில் கூட என் தகப்பனாரிடம் சொல்லிவிட்டுப் போனதும் அதுதான்.




அவரை நான் பார்த்து எட்டு வருஷங்களுக்கு மேலாகி விட்டது. இருந்தாலும் டில்லியிலிருந்து அவர் எனக்கும் என் தகப்பனாருக்கும் கடிதம் எழுதத் தவறியதே இல்லை. அடிக்கடி அவர் தன்னை விதவிதமாகப் போட்டோ எடுத்து அனுப்புவார். அவருக்கு வயது இருபத்தெட்டு. பிறர் மனதை வசீகரிக்கும் அழகு அவரிடம் இருந்தது. அவர் அனுப்பிய போட்டோக்களை எல்லாம் வரிசையாக என் அறையில் மாட்டியிருக்கிறேன். ஒவ்வொரு சமயம் நான் அலங்காரம் செய்துகொண்டு அந்தப் புகைப்படங்களுக்கு எதிரில் போய் நின்று கொண்டு ஏதேதோ பேசுவேன், பைத்தியம் பிடித்தவளைப் போல. நானும் அவருக்கு என்னுடைய புகைப்படங்களை அனுப்பியிருந்தேன். ஆனால் அவர் என்னைப்போல இப்படிப்பட்ட பைத்தியக்காரத் தனமெல்லாம் செய்வாரோ மாட்டாரோ, எனக்குத் தெரியாது. என் தகப்பனார் அவருக்கு எழுதியிருந்த கடிதத்திற்கு, இந்த வருஷம் தை மாதம் வந்து என்னைக் கல்யாணம் செய்து கொண்டு, தன்னோடு என்னை டில்லிக்கு அழைத்துப் போவதாய் அவர் பதில் எழுதியிருந்தார்.

என் தகப்பனார் கல்யாணத்துக்கு வேண்டிய காரியங்களை யெல்லாம் ஆறு மாதத்துக்கு முன்பிருந்தே கவனிக்கத் தொடங்கி விட்டார். சதா அவருக்கு இதைச் செய்ய வேண்டும், அதைச் செய்யவேண்டும் என்ற கவலைதான். நான் அவருக்கு ஒரே பெண்ணானதால், என்னுடைய கல்யாணத்தை வெகு சிறப்பாகவும் ஒரு விதமான குறையும் இல்லாமல் நடத்தவேண்டும் என்றும் அவருக்கு ஆசை இருப்பது இயற்கையே அல்லவா? இந்தக் கவலையில் மறு நாள் முகூர்த்தத்துக்கு, முதல் நாள் இரவுக்குள் சகல

ஏற்பாடுகளையும் செய்து விடக்கூடிய வசதியும் சௌகரியங்களும் இருந்தாலும் அவருக்கு என்னவோ ஒவ்வொரு சிறிய காரியமும் கஷ்டமானதாகத்தான் பட்டது.

இந்த நிலைமையில்தான் நான் 'டைபாயிட்' சுரத்தில் விழுந்து படுத்த படுக்கையாகி விட்டேன். அப்பா என்ன செய்வார்? வீட்டில் அவர் ஒருவர்தான்; இந்தச் சந்தர்ப்பத்தில் வந்து உதவி செய்வதற்கு நெருங்கிய உறவினர் யாரும் இல்லை. அப்பா டாக்டரைக் கலந்து அவருடைய ஆலோசனையைக் கேட்டார். ஆஸ்பத்திரியில் என்னைக் கொண்டுபோய் விடுவதுதான் சௌகரியமென்று டாக்டர் சொன்னார். அவர் சொன்ன யோசனையை அப்பா ஒப்புக் கொள்ளும்படியாகி விட்டது.



டாக்டர் நீலகண்டன் மிகவும் நல்லவர் என்று அடிக்கடி என் தகப்பனார் சொல்லியிருக்கிறார். அவர் எங்கள் வீட்டுக்கு வந்து என்னைப் பார்த்த பொழுதுதான் எனக்கு அவரைத் தெரியும். அவர் அரசாங்க ஆஸ்பத்திரியில் பிரதான டாக்டராக இருந்தபோதிலும், ஊருக்கு வந்த ஆறு மாதத்திற்குள் மிகவும் பிரசித்தமாகி விட்டார். என் தகப்பனாருக்கு டாக்டர்களென்றாலே பிடிக்காது. என் தாயாரிலிருந்து, என் குடும்பத்தில் இறந்துபோன அத்தனை பேரும் டாக்டர்களால்தான் கொல்லப்பட்டிருக்கிறார்கள் என்பது அவருடைய திடமான அபிப்பிராயம். என் தகப்பனாரே அடிக்கடி டாக்டர் நீலகண்டனைப் பற்றிப் புகழ்ந்து சொல்லும்போது எனக்கு அவரைப் பார்க்க வேண்டுமென்ற ஆசை எழுந்தது இயற்கை தானே? நான் படுத்த படுக்கையிலிருந்தே அவரைப் பார்த்தாலும், அவரைப் பார்த்த முதல் தடவையே அவர் மிகவும் நல்லவர் என்ற அபிப்பிராயம் எனக்கு ஏற்பட்டு விட்டது.

அவருக்கு வயது நாற்பது இருக்கலாம். ஆனால் அவர் இன்னும் பிரம்மசாரியாகவே தான் இருக்கிறார் என்று அப்பா சொல்லியிருக்கிறார். அவருடைய சுறு சுறுப்பையும், ஒவ்வொன்றையும் கடமை என்று உணர்ந்து சிரத்தையோடு செய்வதையும் பார்த்தால் அவருடைய வயதை இன்னும் குறைவாகத்தான் எல்லோரும் மதிப்பிடுவார்கள். அகன்ற நெற்றி; அவருடைய முன் தலையில் கொஞ்சம் வழுக்கை விழுந்திருந்ததும் அழகாய்த்தானிருந்தது. அடர்ந்து ஒன்றையொன்று தொட்டு நிற்கும் புருவம். அவருடைய கண்கள் எதையும் அனாயாசமாகவும் அலட்சியமாகவும் மேற் பார்வையாகக் கவனிப்பது போலிருந்தாலும், எதையும் அஜாக்கிரதையாக விட்டு விடுவதில்லை. சிரித்துக் கொண்டே அன்பாகவும் வேடிக்கையாகவும் பேசுவது வைத்திய கலாசாலையில் கற்றுக் கொண்ட பாடமாயிராது; அவரோடு கூடப் பிறந்த சுபாவமாகத்தானிருக்க வேண்டும்.

ஆஸ்பத்திரியில் வந்திருக்கும் எத்தனையோ வியாதியஸ்தர்களில் நானும் ஒருத்தி. வரிசையாகப் போடப்பட்டிருக்கும் கட்டில்களில் என் கட்டிலும் ஒன்று. என்னை அவர் தனிப்பட்ட முறையில் விசேஷமாக எதுவும் கவனித்ததாகத் தெரியவில்லை. நான் ஒவ்வொரு சமயம் அயர்ந்து நித்திரை செய்வேன். ஏன்? நினைவற்றுக் கிடப்பேன் என்றுகூடச் சொல்லலாம். ஆனால் சுயநினைவோடு நான் விழித்துக் கொண்டிருக்கும் ஒவ்வொரு சந்தர்ப்பத்திலும் டாக்டரின் ஞாபகமாகவே எனக்கு இருக்கும். அவருடைய வருகையை ஆவலோடு எதிர்பார்த்துக் கொண்டிருப்பேன். 'டக்' 'டக்' சென்று பூட்ஸ் சத்தம் கேட்கும். நான் அரைகுறையாகத் தூங்கிக் கொண்டிருந்தாலும், அலுப்போடு கண்களை மூடிக் கொண்டிருந்தாலும் ஆவலோடு விழித்துப் பார்ப்பேன். ஆனால் இப்படி நான் எத்தனையோ தடவை ஏமாந்திருக்கிறேன். நான் நினைப்பதுபோல் அவர் வந்திருக்க மாட்டார்! வேறு யாராவது ஒரு நர்ஸோ, டாக்டரோ அந்த அறையைத் தாண்டிக் குறுக்கே நடந்து கொண்டிருப்பார்கள். அதைப் பார்க்கும் பொழுது எனக்கு மிகவும் வெறுப்பாக இருக்கும். ஆனால் இரண்டு

* * * * * * * * * * *

## பஞ்சத்துக்குக் காரணம்

ஒருமுறை ஜார்ஜ் பெர்னர்ட் ஷாவை ஜி. கே. செஸ்டர்டன் என்ற மற்றொரு பிரபல ஆங்கில எழுத்தாளர் சந்தித்துப் பேசிக் கொண்டிருந்தார். பெர்னர்ட் ஷா ஒல்லியாக இருப்பார்; செஸ்டர்டன் பருத்து வாட்ட சாட்டமாக இருப்பார்.

செஸ்டர்டன் பெர்னர்ட் ஷாவைப் பார்த்து, "உங்களைப் பார்த்தால் இந்த லண்டன் நகரத்தில் பெரும் பஞ்சம் வந்து விட்டது போல அல்லவா இருக்கிறது!" என்றார்.

பெர்னர்ட் ஷா சிரித்துக்கொண்டே "தங்களைப் பார்த்தால், அந்தப் பஞ்சத்துக்குக் காரணம் தாங்கள்தான் எனத் தோன்றுகிறதே!" என்றார்.

* * * * * * * * * * *

மூன்று நாளில் அவர் நடந்து வரும் சத்தத்தை மாத்திரம் கவனமாகக் கேட்டுத் தெரிந்து கொண்டு விட்டேன். அப்புறம் நான் ஏமாறுவதே இல்லை.

அவர் 'டக்' 'டக்' கென்று நடந்து வந்து அறை வாசற்படியில் நிற்பார். நான் மெதுவாகக் கண்ணைத் திறந்து திரும்பிப் பார்ப்பேன், தலையை அரைகுறையாகத் தூக்கிக் கொண்டு. அவர் ஒரு நிமிஷம் அங்கேயே நின்று அறையைச் சுற்றிலும் ஒரு தடவை தன் கண் பார்வையைச் செலுத்துவார். சட்டென்று அங்கிருந்து ஒவ்வொரு கட்டிலாகப் பார்த்துக் கொண்டு வருவார். அவரை நன்றாகப் பார்க்க வேண்டும் என்ற ஆசை எனக்கு இருந்தாலும் ஏதோ ஒரு பயமும் மனதில் இருக்கும். நான் பார்ப்பதை அவர் கவனித்து விட்டால்......? இப்படி நான் நினைக்கும்போது வெட்கம் என்னை வந்து சூழ்ந்து கொள்ளும். மெதுவாகக் கண்களை மூடிக் கொள்வேன். அவருடைய உருவம் என் மனக் கண்களில் நிழலாகத் தெரியும். துல்லியமான வெள்ளைச் சட்டை. அதன் மேல் அவருடைய அடிவயிற்றை இறுக்கிப் பிடித்திருக்கும் பித்தானோடு கூடிய டிரௌசர். கழுத்தில் எப்பொழுதும் தொங்கிய வண்ண மிருக்கும் 'ஸ்டெதாஸ்கோப்!'

சிலருக்கு அவர்களுடைய தொழிலே சதா பைத்தியமாகப் பிடித்துவிடுகிறது. உலகத்தில் அவர்களுக்கு வேறொரு கவலையும் இன்பமும் இருக்காது போலிருக்கிறது! என் தகப்பனார் கீதையைப் படித்து கர்மயோகிகளைப் பற்றி எனக்கு எடுத்துச் சொல்லி யிருக்கிறார். பகல், இரவு என்று கவனிக்காமல் அலுப்படையாமல் வியாதியஸ்தர்களிடையே சுற்றிச் சிரத்தையாக, இனிய முகத்தோடு பேசிச் சிகிச்சைசெய்யும் நீலகண்டனைப் பார்த்தபொழுதுதான் இந்த உண்மை எனக்கு விளங்கியது. உண்மையில் விதவிதமான வியாதியஸ்தர்களுக்கெல்லாம் ஊழியம் செய்யும் டாக்டர்களுக்கு சகிப்புத் தன்மையும் பொறுமையும் அசாத்யமாய்த்தான் வேண்டி யிருக்கும் என்பதை உணர்ந்தேன்.

ஒரு நாள் இரவு அயர்ந்து தூங்கிக் கொண்டிருந்தேன். யாரோ என் நெற்றியில் கை வைத்துத் தொட்டுப் பார்ப்பது போலிருந்தது. சட்டென்று கண்ணை விழித்து மிரள மிரளப் பார்த்தேன். டாக்டர்! அவர் என் நெற்றியில் விழுந்திருந்த கேசத்தை ஒதுக்கிவிட்டுக் கொண்டே "ஏதாவது துர்ச் சொப்பனம் கண்டாயா? ஏன் இப்படிச் சத்தம் போட்டாய்? அசட்டுப் பெண்ணே!" என்றார். எனக்கு வெட்கமா யிருந்தது. நான் ஒன்றும் பேசவில்லை. கண்களை இறுக மூடிக் கொண்டேன். அவர் என் உடம்பைப் பரிசோதித்துவிட்டுப் போய்விட்டார். உண்மையில் நான் ஏதோ சொப்பனம் கண்டேன் என்பது மாத்திரம் என் ஞாபகத்தில் இருந்தது. ஆனால் நான் கூச்சலிட்டேனா? ஏன் கூச்சலிட்டேன் என்பது மாத்திரம் எனக்குத் தெரியாது.

நான் ஆஸ்பத்திரிக்கு வந்து ஒரு மாதம் இருக்கும். ஒரு நாள் டாக்டர் என்னை வந்து பார்த்துவிட்டு, "இன்று சாயந்திரம் உங்க அப்பா உன்னை வீட்டுக்கு அழைத்துக் கொண்டு போகப் போகிறார். நீ இந்தக் கட்டிலை ஒழித்துவிட வேண்டும். இதற்கு வேறொரு பெண் தயாரா யிருக்கிறாள். தெரியுமா? ஆஸ்பத்திரிக் கட்டிலை ரொம்ப நாள் சுவாதீனப்படுத்திக் கொண்டிருக்க முடியாது, தெரியுமா?" என்று சிரித்துக் கொண்டே சொன்னார். நான் நன்றாகக் குணமாகி விட்டேன். எனக்கென்னவோ ஆஸ்பத்திரியில் அந்தக் கட்டிலை விட்டு வர இஷ்டமே யில்லை. நான் வீட்டுக்கு வரும்போது அவரைக் கடைசியாகப் பார்க்க வேண்டுமென்ற ஆவலில் வண்டியில் ஏறும் வரை அவரை எதிர் நோக்கினேன். ஆனால் அவரைப் பார்க்க முடியவில்லை. அவர்

வந்த நோயாளியைக் கவலையோடு பார்த்துக் கொண்டிருந்தாரோ?

நான் வீட்டுக்கு வந்ததும் பீரோவில் பதித்திருந்த பெரிய நிலைக் கண்ணாடியின் முன் நின்று என் முழு உருவத்தையும் பார்க்கும் பொழுதுதான் என் உடல் நிலைமை எனக்கு விளங்கியது. நான் எவ்வளவு மாறுதலடைந்து விட்டேன்! என் அழகெங்கே? ஒரு மாதம் படுத்த படுக்கையாய்க் கிடந்ததில் என் உருவே குலைந்து போய்விட்டது. பிரகாசம் பொருந்திய என் கண்கள் உள்ளழுந்தி வெளுத்துப் போயிருந்தன. கன்னம் எலும்போடு ஒட்டி மேடிட்டிருந்தது. நீண்டு வளர்ந்து மினு மினுவென்றிருந்த என்னுடைய தலைக் கேசம் உதிர்ந்து விட்டது எனக்குத் தெரியும். அதனால் எவ்வளவு விகாரம் ஏற்பட்டுவிட்டது என்பதைக் கண்ணாடியில் பார்த்த பிறகு தான் திடுக்கிட்டேன். பள பளப்பாக மெருகிட்டது போலிருந்த என் தேகம் ரத்தக் குறைவினால் சோகையாகி வெளுத்திருந்தது.

நான் பள்ளிக்கூடத்தில் படித்தபொழுது ராமாயண நாடகம் போட்டார்கள். அதற்கு சீதைக்காக ஒரு அழகான பெண்ணைத் தேடிப் பொறுக்க நினைத்தபொழுது பள்ளிக்கூடத்தில் எல்லா மாணவிகளையும் விட நானே அழகி என்று நிர்மாணித்து எனக்கே அந்த வேஷத்தைக் கொடுத்தார்கள். எனக்குப் பாட்டுத் திறமையும் நடிப்புத் திறமையும் அவ்வளவாக இல்லாவிட்டாலும் என் உருவமே எனக்கு அப்பொழுது நல்ல பெயரையும் புகழையும் கொடுத்து விட்டது. அப்பொழுது என் அழகை வர்ணித்தவர்கள் இப்பொழுது வந்து என்னைப் பார்த்தால்...? இதை நினைத்ததும் அப்படியே, கண்ணாடியின் எதிரிலேயே பிரமை பிடித்தவள்போல் நின்றுவிட்டேன்.

என் தகப்பனார் ஒரு கடிதத்தோடு மாடிக்கு வந்தார். "மேனு! ராகவன் நாலாந் தேதி வருவதாகக் கடிதம் எழுதியிருக்கிறான். எனக்குத் தெரியும்; நீ செத்துப் பிழைத்திருக்கிறாய். உன்னை வந்து பார்க்காமலிருக்க அவனுக்கு மனது இடங் கொடுக்குமா?" என்று படபடப்போடு சொல்லிக்கொண்டே கடிதத்தை என்னிடம் கொடுத்தார். நான் கடிதத்தைப் பிரித்துப் படித்தேன். நான் அந்தக் கடிதத்தைத் திருப்பிக் கொடுப்பதற்கு முன்னால் என் தகப்பனார் கீழே இறங்கிப் போய்விட்டார். நான் மேஜைமீது அந்தக் கடிதத்தைப் போட்டுவிட்டு மனக் குழப்பத்தோடு நாற்காலியில் உட்கார்ந்து விட்டேன்.

ராகவனைச் சந்தோஷத்தோடு வரவேற்கக் கூடிய சமயமாக எனக்கு அப்பொழுது இல்லை. 'அவர் ஏன் இப்பொழுது வர வேண்டும்' என்று என்னை நானே கேட்டுக் கொண்டேன். அவர் இப்பொழுது வருவது எனக்குக் கொஞ்சம் வெறுப்பாகத்தானிருந்தது. என் உருவம் இப்படி மாறி இருப்பதை எண்ணி நான் அவருடைய வருகையில் வெறுப்படையவில்லை. ஆனால் என் மனமே இப்பொழுது மாறியிருந்தது. என் தகப்பனார் அவருடைய கடிதத்தைப் பார்த்தது முதல் சந்தோஷமும் நிம்மதியும் கொண்டவராகயிருந்தார். நான் அந்தச் சமயத்தில் என் மனதில் ஏற்பட்டிருந்த கசப்புணர்ச்சியை வெளியே காட்டாமலிருக்க மிகவும் சிரமப்பட்டேன்.

ராகவன் வருவதற்கு முதல் நாள் இரவு மணி ஒன்பது இருக்கலாம். அப்பா கடைசியாக வேலைக்காரனையும் சமையல்காரனையும் கூப்பிட்டு "அந்த நாற்காலியை இங்கே போடவேண்டும். இந்த மேஜையை அங்கே போடவேண்டும். காலையில் இட்லி இப்படி இருக்க வேண்டும். மத்தியானம் சாப்பாட்டுக்குச் செய்யும் சாம்பார் அப்படி இருக்க வேண்டும்" என்று ஏதேதோ உத்திரவிட்டுக்கொண்டிருந்தார். எனக்குத் தூக்கம் வராததால் அறையின் ஜன்னல் விளிம்பில்



உட்கார்ந்து வெளியே தெரியும் வானத்தையே கவனித்துக்கொண்டிருந்தேன். கருநிறமான பட்டில் வைரக் கற்களை இறைத்திருப்பதுபோல் வான மண்டலத்தில் கூட்டம் கூட்டமாகவும் தனித் தனியாகவும் நட்சத்திரங்கள் மின்னிக்கொண்டிருந்தன.

ராகவனுடைய வருகைக்காக என் தகப்பனார் துடித்த துடிப்பைப் பார்த்தால் அவருக்கு நான் ஏன் பெண்ணாகப் பிறந்தேன் என்று எனக்குத் தோன்றியது. ராகவனுடைய மனது கோணாமல் எல்லாம் ஒழுங்காக நடைபெற வேண்டுமே என்று அவர் பதற்ற மடைந்தார். ஒருவர் மாப்பிள்ளையாக வருவதற்கு இவ்வளவு கஷ்டமெல்லாம் படவேண்டுமென்றால் அவர் மாப்பிள்ளையாக வராமலிருப்பதே நல்லதென்று எனக்குத் தோன்றியது. அவர் 'வருகிறேன்' என்று கடிதம் எழுதியவுடன் வீட்டில் எவ்வளவு அமர்க்களம்? எவ்வளவு பணச் செலவு? வேலைக்காரர்களுக்கு எவ்வளவு சிரமம்? ராகவன் அரண்மனையிலேயே வசிப்பவரா யிருந்தாலும், நம் வீட்டுக்குச் சில நாள் வந்து தங்கிவிட்டுப் போவதற்காக நம்முடைய வீட்டை நினைத்ததும் அரண்மனை யாக்கிவிட முடியுமா?

அவரை ஸ்டேஷனிலிருந்து அழைத்துக்கொண்டு வரவும் வேறு போக்கு வரவு வசதிக்காகவும் என் தகப்பனார் திவான் பகதூரின் காரை நான்கு நாளைக்கு இரவல் கேட்டார். அந்தக் கார் பழுதா யிருந்ததால் அதைப் பழுது பார்க்கும் செலவு இருநூறு ரூபாயும் என் தகப்பனாரே கொடுக்கும்படி யாகிவிட்டது. அது மட்டுமல்ல; கார் ஓட்டுபவனுக்குத் தினம் பத்து ரூபாய் கொடுக்க வேண்டுமென்று சொல்லி அந்தப் பணத்தையும் முன்னதாகவே திவான்பகதூர் வாங்கிக்கொண்டார் — அது இருக்கட்டும். ராகவன் என்னைப் பார்த்தால் நான் இருக்கும் நிலையில் என்னைக் கலியாணம் செய்துகொள்ள அவர் சம்மதிப்பாரா? முன்பு அவருக்கு நான் அனுப்பிய புகைப்படத்துக்கும் இப்பொழுது நான் இருக்கும் நிலைக்கும் எவ்வளவு வித்தியாசம்? இப்போது என்னை விவாகம் செய்துகொள்ளத் துணிவு ஏற்படுமா அவருக்கு? எனக்கென்னமோ நம்பிக்கையில்லை. இதை நான் உணர்ந்த அளவு என் தகப்பனார் உணர்ந்ததாகத் தெரியவில்லை. வீட்டை ஒழுங்காக்கி ஜோடனை யெல்லாம் செய்ததுடன் "நாளைக்கு நீ இந்தப் புடவையை உடுத்திக்கொள். அந்த நகையைப் போட்டுக்கொள். இப்படி நில்லு - அப்படிப் பேசு" என்றெல்லாம் அடிக்கடி எனக்கு அவர் எச்சரிக்கை செய்து கொண்டிருந்தார். எந்தப் புடவையை உடுத்திக் கொண்டால் என்ன? எவ்வளவு நகையை அள்ளிப் போட்டுக் கொண்டால் என்ன? நான் முன்பிருந்த அழகோடு இப்பொழுது விளங்க முடியுமா? 'ராகவன் என்னை விரும்பமாட்டார்' என்று ஏதோ ஒன்று என் மனதிலிருந்து கூறியது. அவர் என்னை விரும்பக்கூடாது என்பதைத்தானே நானும் விரும்பினேன்! அவர்மீது எனக்கு வெறுப்பில்லை. ஆனால் என்னுடைய விருப்பந்தான் வேறெங்கோ லயித்திருந்தது...

...இரவு நெடுநேரம் வரையில் ஜன்னலிலேயே உட்கார்ந்து ஏதேதோ கனவுகளை எல்லாம் கண்டு கொண்டிருந்தேன்.

நான் காலையில் எழுந்திருக்கும் போது மணி எட்டு இருக்கும். வாசலில் கார் வந்து நின்ற சப்தம் கேட்டது. மாடியில் இருந்தபடி ஜன்னல் வழியாக எட்டிப் பார்த்தேன். முதலில் என் தகப்பனாரும், பிறகு முற்றிலும் மேனாட்டு முறையில் உடைதரித்த ஒரு வாலிபரும் இறங்கினார்கள். வேலைக்காரனும் டிரைவரும் பெட்டி படுக்கைகளை எடுத்துக் கொண்டு வந்தனர்.

நான் ஐந்து மணிக்கே எழுந்து அலங்காரம் செய்துகொண்டு ராகவனை வரவேற்கத் தயாராக இருக்க வேண்டுமென்று என் தகப்பனார் சொல்லியிருந்தார். நானும் ஐந்து மணிக்கெல்லாம் எழுந்துவிட வேண்டும் என்று தான் நினைத்தேன். ஆனால் இரவு நெடுநேரம் வரையில் கண் விழித்திருந்ததால் காலையில் மிகவும் அயர்ந்து தூங்கிவிட்டேன்.

(அடுத்த இதழில் முடியும்)

## காந்திஜியின் ஆசை

1927-ம் வருஷம் காந்திஜி தூத்துக்குடியில் பேசும்போது கூறியது:—

**நான் தமிழ் கற்கத் தொடங்கியதற்கு ஒரு காரணம் உண்டு.**

**திருக்குறளை மூலத்திலேயே படிக்க வேண்டுமென்று நான் ஆசைப்பட்டேன்.**

**தமிழ் பாஷையில் நல்ல புலமை அடைவதற்கு வேண்டிய ஓய்வை ஆண்டவன் எனக்குக் கொடுக்கவில்லை. அதற்காக நான் மிகவும் வருந்துகிறேன்.**




# கம்பர் தரும் காட்சி

• • •

## 206. மலரடி சுமந்து வாழ்!

உயிர் போகும் தறுவாயில் இருக்கும் வாலியைப் பார்த்து மகன் அங்கதன் புலம்பினான். முதலில் தயான குணத்தை எண்ணிப் புலம்பினான். இனி:

ஒரு பெரிய விஷயத்தில் ஒருவர் ஈடுபட்டு வேலை செய்தால் பிரம்மப் பிரயத்தனம் என்றும், பகீரதப் பிரயத்தனம் என்றும் புராணக் கதைகளை யொட்டி இன்றும் பேசுகிறோம்; முன்னோர்களும் அப்படியே பேசி வந்தார்கள்.

சமுதாயத்தில் சச்சரவும் குழப்பமும் மலிந்திருந்தது — உண்மை ஒன்றைக் காண முடியாத காரணத்தினால் தான். அப்போது வாலி என்ன செய்தான்? எல்லாரையும் அழைத்து, கட்சியும் கட்சியும் கலந்து கொள்ளச் செய்து உண்மையைத் தெளிவுபடுத்திச் சமாதானத்தை உண்டாக்கினான். இதனால் சகல கட்சிகளுக்கும் க்ஷேமம் உண்டாயிற்று. எல்லா விதத்திலும் பயன் அடைந்தது சமுதாயம். இதைப் பற்றி எப்படிப் பேசினார்கள்! "வாலியானவன் பாற்கடலையே கடைந்து அமுதத்தையே வழங்கினான்" என்று உல்லாசமாய்ச் சொன்னார்கள். இந்தப் புகழுரை வாலியோடு ஒட்டிக் கொண்டது. இவ்வளவு பெரிய காரியத்தைச் சாதிப்பதற்கு அபாரமான அறிவு இருக்க வேண்டும்.

வாலியின் பராக்கிரமம் எப்படி இருக்கிறது? பூமியைச் சுற்றிலும் பெரிய பெரிய பர்வதங்கள் பெரிய பெரிய சிகரங்களோடு நிமிர்ந்து இடக்கின்றன — அதாவது சக்கரவாளகிரி. அந்தச் சிகரங்களைப் பொருட் படுத்தாமலே மிதித்து மிதித்துப் பாய்வான் வாலி. அதனால் எல்லாச் சிகரங்களும் தழும்பேறிக் கிடந்தன.

குலவரை நேமிக்குன் றம்
என்றுவான் உயர்ந்தகோட் டின்

தலைகளும்நின் பொற்றா ளின்
தழும்பினித் தவிர்ந்தஅன் றே!

மலையுடன் அரவும்மற் று
மதியமும் பலவும்தாங் கி

அலைகடல் கடையவேண் டின்
ஆர்இனிக் கடைவர்ஐ யா!

[குலவரை : மகா பர்வதமாகிய சக்கர வாளகிரிகள்; வான் உயர்ந்த கோட்டின் தலைகளும் : வானளாவிய சிகரங்களின் முகடுகளும்; நின் பொற் தாளின் தழும்பு : உன் அருமையான கால் பட்டு ஏற்பட்ட தழும்புகள்; தவிர்ந்த அன்றே : இனி அந்த முகடுகளுக்கு இல்லை தான்; மலையுடன் அரவும் மற்றும், மதியமும் பலவுந் தாங்கி : பாற்கடலைக் கடையும் போது தாழியாகிய பூமியைக் காலில் வைத்துப் பிடித்துக் கொண்டு, மந்தர கிரியை மத்தாக வைத்து, வாசுகி என்னும் பாம்பைத் தாம்பாகச் சுற்றி சந்திரனை அடை ஆணாக நட்டு இரு கையாலும் கடைந்தான் வாலி என்பது புராண வரலாறு.]

• • •

இப்படி யெல்லாம் அழுது அரற்றிக் கொண்டிருந்தான் அங்கதன். இயல்பு தானே அது! பார்த்தான் வாலி. அருமை மகனிடம் என்றுமில்லாத பரிவு உண்டாய் விட்டது. பேசுகிறான்: "அப்பா நீ சிறு பையன். நான் சொல்லுகிற வார்த்தைகளைக் கேட்க வேண்டும். இதோ நிற்கிற ராமன் யார் தெரியுமா?

பாலமை தவிர்நீ; என் சொற்
பற்றுதி யாயின்,தன் னின்
மேலொரு பொருளும்இல் லா
மெய்ப்பொருள் வில்லும்தாங் கிக்
கால்தரை தோயநின் று
கட்புலக்(கு) உற்றதம் மா!
மால்தரும் பிறவிநோய்க் கு
மருந்திவன் கண்டாய்மைந் த!

[பாலமை தவிர் நீ: குழந்தைப் பருவத்துக்குரிய இந்த அழுகையையும் அரற்றலையும் நீ விட்டொழிக்க [வேண்டும்; என் சொல் பற்றுதியாயின்: என்னுடைய சொல்லைக் கேட்டு நீ நடக்கிற தென்றால்; தன்னின் மேலொரு பொருளுமில்லா மெய்ப் பொருள்: தனக்கு மேல் ஒரு வஸ்து, ஞானமயமான வஸ்துவோ ஆனந்த மயமான வஸ்துவோ இல்லை யென்று சொல்லும்படியான பரம் பொருள் தானே; வில்லும் தாங்கிக் கால் தரை தோய நின்று: வில்லை எடுத்து, கால்களும் பூமியில் தோய்ந்து; கட்புலக்கு உற்றதம்மா: அடடா, நம்முடைய கட்புலனுக்கே தெரியும் படியாக வந்துள்ளது; மால்தரும் பிறவி நோய்க்கு மருந்து. இவன் கண்டாய்: ஏதோ பிறவி ஒன்று உண்டென்றும், அது காரணமாகச் சாவு ஒன்று உண்டென்றும், நினைத்துக் கொண்டிருக்கிற மயக்கம் தீரவேண்டுமானால் இந்த ராமனது வாழ்க்கையை முற்றும் உணர வேண்டும். அதுதானப்பா நமக்கு வாய்த்த மருந்து; மைந்த: செல்வக் குமாரனை அங்கதனே!

குறிப்பு:— ஞானிகளை எப்படிப் பார்க்க வேண்டும், மதிக்க வேண்டும் என்ற விஷயத்தைத் தெளிவுபட வாலியின் மூலம் சொல்லுகிறார் கம்பர்.

* * *

உள்ளத்தி லிருந்து வருகிற வார்த்தைகளாதலால், அங்கதனைப் பாதித்து விட்டது வாலி எடுத்துச் சொன்ன உண்மை.

இனி விஷயத்தை நேர் முகமாகச் சொல்ல வேண்டியது தானே!

"ராமன் காரணமாக என்னுடைய உயிர் நீங்கியது என்று கொஞ்சமும் கருதக் கூடாது. ஆனால் உன்னுடைய வாழ்க்கைக்கு உரிய லக்ஷ்யமான காரியத்தையே நீ கருத வேண்டும். அதைத்தான் உனக்குச் சொல்லப் போகிறேன்."

என்னுயிர்க்(கு) இறுதிசெய் தான்
என்பதை இறையும்எண் ணு(ல)
உன்னுயிர்க்(கு) உறுதிசெய் தி
இவற்(கு)அமர் உற்றதுண் டேல்.
பொன்னுயிர்த்(து) ஒளிரும்பூ ணாய்.
போதுதி, நிலைமைநோக் கி
மன்னுயிர்க்(கு) உறுதிசெய் வான்
மலரடி சுமந்துவாழ் தி.

[உன்னுயிர்க்கு உறுதி செய்தி: உன்னுடைய ஜன்ம சாபல்யத்தை நோக்கியே இனி நடந்து கொள்வாயாக; இவற்கு அமர் உற்றது உண்டேல் போதுதி: இந்த ராமன் யாரோடாவது போர் செய்கிறது என்று ஏற்பட்டால் அவனுடன் போய்ப் போர் செய்ய வேண்டும்; பொன் உயிர்த்து ஒளிரும் பூணாய்: பொன்னின் ஒளி சதா வீசிக் கொண்டிருக்கும் ஆபரணங்களை அணிந்த அருமைப் புதல்வனே; நிலைமை நோக்கி மன்னுயிர்க்கு உறுதி செய்வான் மலரடி சுமந்து வாழ்தி: மக்களின் பக்திக்கு ஏற்றவாறெல்லாம் பதவி அளிக்கும் சகுண இந்த ராமனது திருவடிகளை வணங்கி வாழ்வாயாக!]

வாலிக்கு ராமனது செயல், எங்கும் நிறைந்து எல்லாமாய் நிற்கும் ஈசன் செயல்தான் என்று தெளிவாகப் படுகிறது. அப்படிப் படுவதை, மகனுக்குச் சொல்லும் சொல் சூசிக்கிறது.

## வல்லரசுக் குழந்தைகள்!

உலகத்தில் ஏன் யுத்தம் உண்டாகிறது. வல்லரசுகள் ஏன் ஒன்றோடொன்று சண்டை போட்டுக் கொள்ளுகின்றன என்பதை மாஜி அமெரிக்க ஜனாதிபதி ஆப்ரகாம் லிங்கன் தெளிவாக விளக்கியிருக்கிறார்:

ஒரு நாள் ஆப்ரகாம் லிங்கனுடைய வீட்டில், அவருடைய குழந்தைகள் இரண்டும் ஒன்றோடொன்று சண்டை போட்டுக் கொண்டு அழுது கொண்டிருந்தன. வீடு முழுவதும் ஒரே சத்தமும் அழுகையும் கூச்சலுமாக இருந்தது. பக்கத்து வீட்டுக்காரர் எழுந்து போய், கதவைத் தட்டி, ஆப்ரகாம் லிங்கனை அழைத்து "ஏன் உம்முடைய குழந்தைகள் இப்படிச் சண்டை போட்டுக் கொண்டிருக்கின்றன?" என்று கேட்டார்.

"எதற்காகச் சண்டை போடும், நீங்களே சொல்லுங்கள். இன்று உலக வல்லரசுகள் எதற்காகச் சண்டை போட்டுக் கொண்டிருக்கின்றனவோ அதற்காகத்தான் அவைகளும் சண்டை போடுகின்றன. என்னிடம் மூன்று ஆப்பிள் பழங்கள்தான் இருக்கின்றன. ஆனால், இரண்டு குழந்தைகளும் தலைக்கு இரண்டு பழங்கள் வேண்டும் என்று அழுகின்றன. நான் என்ன செய்கிறது?" என்று சொன்னார் ஆப்ரகாம் லிங்கன்.



# அவசர காரியம்

எஸ்.வி.எஸ்

சின்னசாமி நாயுடுவின் வீட்டுக்குள் செல்வமணியும் சிங்காரவேலும் வெகு அவசரமாக நுழைந்தார்கள். செல்வமணியின் முகத்தில் ஒரு கடுகடுப்புத் தெரிந்தது. சிங்காரவேலு ஒன்றும் புரியாதவனாய் அவன் பின்னாலேயே வீட்டுக்குள் நுழைந்தான்.

செல்வமணி நேரே மாடிக்குச் சென்று பார்த்தான். கொளும்பு நகரத்தில் பிரசித்தி பெற்ற 'ஷாங்காய் லாண்டிரி'யின் சொந்தக்காரனை முத்துக்குமாரன் உட்கார்ந்திருந்தான். அவனுக்கு வயது இருபத்தைந்து என்று மதிப்பிடலாம். அவனைப் பார்த்து "என்னாங்க, நீங்க கச்சேரிக்கு வரேன்னு சொன்னீங்க. ஒரு மணி நேரமாக நானும் காத்துக் காத்துப் பார்த்தேன். நீங்க வருகிற வழியாகக் காணவில்லை. ஏன் என்னை இப்படி ஏமாற்றி விட்டீங்க?'' என்றான் செல்வமணி கோபமாக.

"எல்லாம் உங்கள் ஊர் லாண்டிரிக்காரங்க பண்ணுகிற அக்கிரமத்தினால் தான் வர முடியவில்லை. இன்றைக்குத் துணி தருவதாகச் சொன்னாங்க. போய்க் கேட்டால், இன்னும் வெளுத்து வரவில்லை என்கிறாங்க! அவங்களை என்ன பண்றது? எனக்கோ ஒரு வெள்ளைத் துணி கூட இல்லை'' என்று அங்கலாய்த்தான் முத்துக்குமாரன்.

இதைக் கேட்கச் சிங்கார வேலுக்கும் செல்வமணிக்கும் ரொம்ப வருத்தமாக இருந்தது.

"நீங்கள் எந்தச் சலவைக் கடையில் துணி போட்டீங்க, சொல்லுங்க?'' என்று செல்வமணி கேட்டான்.

"எல்லாம் உங்கள் பிரசித்தி பெற்ற 'குகானந்தா சலவைச் சாலை'யில் தான்!'' என்றான் முத்துக்குமாரன்.

உடனே செல்வமணி சிங்கார வேலின் முகத்தைப் பார்த்தான். சிங்கார வேலு அசடு வழிய நின்றுகொண்டிருந்தான். ஆமாம், என்ன செய்வான் அவன்! 'குகானந்தா சலவைச் சாலை'யின் சொந்தக்காரன் அவன். அந்தக் கடையைப் பற்றி இவ்வளவு அழகிய அபிப்பிராயத்தை அவன் எதிரிலேயே சொன்னால் அவன் முகத்தில் அசடு வழியாதிருக்குமா?



ஆகவே சிங்காரவேலு அந்தப் பேச்சை மாற்றுவதற்காக, "என்ன செல்வம், இவங்க யாரு, என்ன? எப்போ வந்தாங்க? எனக்கு இதுவரை ஒன்றுமே இவங்களைப் பற்றிச் சொல்லவில்லையே!'' என்றான்.

செல்வமணி "இவங்க எங்க தூரத்து உறவாம். கொளும்புலே 'ஷாங்காய் லாண்டிரி' என்று பெரிய சலவைக்கடை வைத்து நடத்துறாங்க. ஏதோ முக்கியமான காரியமாகச் சென்னைக்கு வந்திருக்காங்க! நம்ம அப்பாவுக்கு நல்லாத் தெரிஞ்சவங்க!'' என்று சொல்லி நிறுத்தினான்.

"ஓகோ! ஆனால், இவங்க பேர் என்னவென்று நீ சொல்லவில்லையே!''

"பெரியவங்க பெயரெல்லாம் சின்னவங்க சொல்லலாமா!'' என்று வெட்கமும் நாணமும் தோன்றத் தலையைக் குனிந்த வண்ணம் கூறினான் செல்வமணி.

அப்பொழுது தான் சிங்கார வேலுக்கு விஷயம் விளங்கிற்று. செல்வமணியின் இதயத்தில் தனக்கு இடமில்லை என்று ஏற்படுகிறது அல்லவா! அது அவனுக்கு ஏமாற்றமாகவும் வருத்தமாகவுமிருந்தது.

அதற்குள், "என் பெயர் கே. பி. முத்துக் குமாரன். என் சினேகிதர்கள் கொளும்பில் 'கே. பி. எம்.' என்று சுருக்கமாக என்னைக் கூப்பிடுவார்கள்'' என்றான் முத்துக்குமாரன்.

இதைக் கேட்டதும் சிங்காரவேலு திடுக்கிட்டான். உடம்பெல்லாம் ஒரு மாதிரி நடுங்கிற்று. என்ன செய்வது என்று தெரியாமல் தவித்தான். இருந்தாலும் நாக்கு குழற "எனக்கு ஒரு அவசர காரியம் இருக்கிறது, நான் வரட்டுமா?'' என்று சொல்லிவிட்டு அவசரமாக அவ்விடத்தை விட்டுக் கிளம்பிச் சென்றான்.

அவனுடைய இந்தச் செய்கை முத்துக்குமாரனுக்கும் புரியவில்லை, செல்வமணிக்கும் புரியவில்லை.

* * *



தியாகராஜ நகரில் பிரசித்தி பெற்று விளங்கும் 'குகானந்தா சலவைச் சாலை'யின் சொந்தக்காரர் கோவிந்தராஜுலு நாயுடு. அவருடைய புதல்வன்தான் நம் சிங்காரவேலு. கொழும்பில் இரண்டு கடைகள் நடத்தி ஏராளமான பணம் சம்பாதித்தவர் சின்னசாமி நாயுடு. அவருடைய புதல்விதான் செல்வமணி.

செல்வமணிக்குக் கல்யாணம் செய்ய வேண்டும் என்பதை முன்னிட்டுத்தான் சின்னசாமி நாயுடு சென்னைக்கு வந்தார். வந்த இடத்தில் கோவிந்தராஜுலு நாயுடுவின் சிநேகம் கிடைத்தது. அவருக்கு வயது வந்த ஒரு பையன் இருக்கிறான் என்றதும், அந்தச் சிங்காரவேலுக்கே தன் மகளைக் கொடுத்து விடலாம் என்று நினைத்தார். ஆனால் ஓரளவு சரஸ்வதி கடாட்சம் பெற்ற செல்வமணி, சரஸ்வதி தேவியால் பரிபூரணமாக வஞ்சிக்கப்பட்ட சிங்காரவேலுவைக் கல்யாணம் செய்து கொள்ள இசையவில்லை. ஆனால் அவர்கள் இருவரும் சேர்ந்து பழகினால் நாளடைவில் மனசு சரியாகிவிடும் என்று அந்த இரு பெற்றோரும் நம்பினார்கள்.

அந்த நம்பிக்கையின்படி வெகு நாட்களாகச் சிங்காரவேலும் செல்வமும் கடைக்குப் போனாலும், கச்சேரிக்குப் போனாலும், 'பீச்'சுக்குப் போனாலும் சேர்ந்தே போய் வந்தார்கள். ஆனால் அன்று செல்வமணியைக் கச்சேரியில் சந்திப்பதாகச் சொல்லியிருந்தான். அதன்படியே சந்தித்தான். ஆனால் முத்துக்குமாரன் வருவதாகச் சொல்லிவிட்டு ஏமாற்றியது செல்வமணிக்கு மனம் சஞ்சலமடையச் செய்தது. அதனால் பாதிக் கச்சேரியில் அவள் எழுந்து வீட்டுக்கு வந்தாள். அவள் பின்னாலேயே சிங்காரவேலு வீட்டுக்கு வந்ததையும் பார்த்தோம்.

அதற்கு மறு நாள் காலை சிங்காரவேலின் தந்தை அவனை எதிர்பார்த்துக் கொண்டிருந்தார். அந்தச் சமயத்தில் முத்துக்குமாரன் அங்கே வந்தான். அவனைப் பார்த்தவுடனேயே கோவிந்தராஜுலு நாயுடு ஓர் அசட்டுச் சிரிப்புடன் "உங்களுக்குச் சொன்னபடி துணி கொடுக்க முடியாமல் போய்விட்டது! இன்றைக்குக் கட்டாயம் கொடுத்து விடுகிறேன்" என்றார்.

"அதனால் பரவாயில்லை. நேற்று நீங்க கொடுக்காமல் போனதே நல்லதாகப் போச்சு" என்றான் முத்துக்குமாரன்.

"ஏன்?" என்றார் கோவிந்தராஜுலு நாயுடு.

"நான் தங்கியிருக்கும் வீட்டுக்காரருக்கு வயது வந்த ஒரு மகள் இருக்கிறாள். அந்தப் பெண்ணைக் கல்யாணம் பண்ணிக் கொள்ள எனக்குச் சம்மதந்தானா என்பதைக் கேட்பதற்காக அந்தப் பெண்ணின் அப்பா ஒரு வாரமாக யோசித்துக்கொண்டிருந்தாராம். அதற்கு அந்தப் பெண் வீட்டில் இல்லாத சமயமாகப் பார்த்துக் கேட்க வேண்டுமென்று இருந்தாராம். நேற்று நீங்க துணி கொடுக்காததனாலே நான் வெளியே போகவில்லை. அவள் வெளியே கச்சேரிக்குப் போயிருந்தாள். நான் தனியாக இருக்கவே என்னை வந்து கேட்டார். 'ஐயா, எனக்குக் கலியாணமாகி இரண்டு குழந்தைகள் கூட இருக்கின்றன' என்றேன். நான் இந்த உண்மையைச் சொல்லியிராவிட்டால் எவ்வளவு சிரமம் பாருங்கள். நீங்கள் துணி கொடுக்காததனால் தானே நான் வீட்டில் இருக்க முடிந்தது, அவருக்கும் இந்த விஷயத்தைத் தெளிவாகச் சொல்ல முடிந்தது" என்றான் முத்துக்குமாரன்.

* * *

முதல் நாள் செல்வமணி முத்துக்குமாரனுடன் பழகிய விதத்திலிருந்து செல்வமணி முத்துக்குமாரனுடைய மனைவியாகிவிடுவாளோ என்று பயந்து கொண்டிருந்தான் சிங்காரவேலு. முத்துக்குமாரன் இன்று உண்மையைச் சொன்ன

வுடன் சிங்காரவேலு அடைந்த சந்தோஷத்தைச் சொல்லி முடியாது.

அந்தச் சந்தோஷத்தை யாரிடமும் சொல்லிக் கொள்ள முடியாமல் தியாகராஜ நகரில் உள்ள பனகல் பார்க்கில் சிங்கார வேலு உட்கார்ந்திருந்தான்.

அவனுடைய பகற் கனவைக் கலைத்துக் கொண்டு, "என்னுங்க! என்மேல் உங்களுக்குக் கோபமா?" என்று ஒரு குரல் வந்தது. திரும்பிப் பார்த்தான். செல்வமணி நின்று கொண்டிருந்தாள்.

"கோபமா? எனக்கா? அப்படி எல்லாம் ஒன்றுமில்லையே!" என்றான்.

"பின் ஏன் அப்படி நேற்று பேசிக் கொண்டிருக்கும்போதே திடுதிடு என்று ஓடினீர்கள்?"

"ஒரு அவசர காரியம் இருந்தது."

"என்ன அவசர காரியம்?"

"அதெல்லாம் சொல்ல முடியுமா?"

"நான் சொல்லட்டுமா? எங்க வீட்டுக்கு வந்திருந்த முத்துக்குமாரன் உங்கள் கடையை ரொம்பத் தூஷித்தார். நீங்கள் என்மேல் கோபங் கொண்டு சொல்லிக் கொள்ளாமல் ஓடி விட்டீர்கள்."

"அதெல்லாம் ஒன்றுமில்லை! அப்போது ஒரு அவசர காரியத்துக்காகத்தான் போனேன். நீ வீட்டுக்குத் தானே போக வேண்டும்! வா, போவோம்" என்றான்.

இரண்டு பேரும் மௌனமாக நடந்தார்கள். கொஞ்ச நாழிகையில் செல்வமணியின் வீட்டை அடைந்தார்கள். வீட்டுக்குள் கோவிந்தராஜுலு நாயுடுவும் சின்னசாமி நாயுடுவும் பேசிக்கொண்டிருந்தது காதில் விழுந்தது. செல்வமும் சிங்காரவேலும் வாசற்படியின் மீது காலை வைத்த போது, "சிங்காரவேலுவைக் கல்யாணம் செய்து கொள்ளச் செல்வம் சம்மதித்து விட்டாள். உங்கள் அபிப்பிராயமும் பின்னையாண்டான் அபிப்பிராயமுந்தான் தெரிய வேண்டும்" என்று சின்னசாமி நாயுடு கூறியது தெளிவாக அவர்கள் காதில் விழுந்தது.

அப்போது செல்வத்துக்கு இத்தனை நாளும் காணக்கிடைக்காத நாணம் எங்கிருந்தோ வந்து ஒட்டிக் கொண்டது. சிங்காரவேலுக்கு 'இது பூலோகமா? சுவர்க்கலோகமா?' என்ற பிரமை உண்டாயிற்று. அடுத்த கணம், இப்பொழுது இந்த வீட்டுக்குள் நுழைவது உசிதமல்ல என்று எண்ணி வாசலிலேயே செல்வத்திடம் விடை பெற்றுக் கொண்டான். போகிற போக்கில், "அந்த அவசர காரியம் என்னவென்று சொல்ல மாட்டீர்களா?" என்று நாணத்துடன் கேட்டாள் செல்வமணி.

"அதை மட்டும் இப்பொழுது கேட்காதே!" என்று சொல்லிவிட்டுப் போனான்.

இப்போது நீங்களே சொல்லுங்கள்! அவனுடைய பெட்டியில் வெளுத்த துணிகள் ஒன்றும் இல்லாததால், தன் கடைக்குச் சென்று வேறு ஒருவருடைய துணிகளைப் போட்டுக் கொண்டு கச்சேரிக்குப் போய்விட்டான். ஆனால் கே. பி. முத்துக்குமாரனை நேரில் பார்த்து அவன் பெயரைக் கேட்டபோது அவனுக்குத் திகில் உண்டாயிற்று! 'கே. பி. எம்.' என்ற விலாசத்தைக் கேட்டதும் அந்தத் திகில் பன்மடங்காகி விட்டது. முகம் துடைக்கும் பாவனையாகத் தன் கைக்குட்டையி லிருக்கும் சலவை மார்க்கைப் பார்த்தான். அதிலும், 'கே.பி.எம்.' என்றிருந்தது. யாருடைய துணிகளை அவன் போட்டுக் கொண்டு வந்திருந்தானோ, அதே ஆசாமியின் எதிரில் தான் நிற்பதை யுணர்ந்தான். உடனே 'அவசர காரியம்' என்று சொல்லி அந்த இடத்தை விட்டு வெளியே ஓடிவந்து விட்டான். இதைச் செல்வமணி கிளறிக் கிளறிக் கேட்கிறாள்! இந்த அற்ப விஷயத்தை அவளிடம் சிங்காரவேலு எப்படிச் சொல்லுவான்? அதனால்தான் "அதை மட்டும் கேட்காதே!" என்று சொல்லி விட்டு வந்தான்.

"நீங்கள் எங்கே போய்விடப் போகிறீர்கள்? பார்த்துக் கொள்வோம்!" என்று செல்வமணி தன் மனசுக்குள் கூறிக் கொண்டது சிங்காரவேலுக்குக் கேட்கவில்லை. பாவம், சிங்காரவேலு!



வழிப்போக்கர்:—ஏனப்பா, சைக்கிளில் ஏறிக்கொண்டு போகிறதுதானே!

ஓடுபவன்:—'கடிதம் ரொம்ப அவசரம்; சைக்கிளை எடுத்துக் கொண்டு வேகமாய் ஓடு' என்று எசமான் சொன்னாருங்க!



# விளம்பர யுக்தி

என். நாராயணன்

'வியாபாரத்திற்கு அழகு விளம்பரம் செய்தல்' என்பது ஒரு பழமொழி. பழமொழி என்று சொல்லுவதைக் காட்டிலும் புதுமொழி என்றுதான் அதைச் சொல்லவேண்டும். உண்மையில், தற்காலத்தில் விளம்பரமின்றி எந்த வியாபாரமும் நடைபெறுவதில்லை. அப்பளத்திலிருந்து சப்பாத்தி லேகியம் வரை எந்தச் சரக்குக்கும் தினசரிப் பத்திரிகைகளிலும் வார, மாதப் பத்திரிகைகளிலும் தவறாமல் விளம்பரங்களைக் காணலாம்.

சரக்குகளுக்கு விளம்பரம் செய்யும் பொழுது, மனிதர்கள் மாத்திரம் ஏன் தங்களை விளம்பரம் செய்து கொள்ளக் கூடாது? ரொம்பவும் நியாயமான கேள்வி அல்லவா? உண்மையில் மனிதர்கள் தங்களை விளம்பரப்படுத்திக் கொள்ளத்தான் செய்கிறார்கள். வியாபாரத்தில் விளம்பரங்கள் பல ரகங்களிலும் வெளியிடப்படுவது போலவே, மனிதர்களும் தங்களை விளம்பரப் படுத்திக் கொள்ளப் பலவிதமான யுக்திகளைக் கையாளுகிறார்கள்.

விளம்பரத்தில் 'நேரடியான முறை' என்பது ஒன்று. அதாவது, சரக்கைப் பற்றிப் பளிச்சென்று ஒரே வரியில் விளம்பரம் செய்வது. உதாரணமாக, 'ரோஜா மார்க்குப் புகையிலையை உபயோகியுங்கள்' என்பது ஒன்று.

"எங்கள் வீட்டில் எப்பொழுதும் நெய்யில்தான் பட்சணங்கள் தயாரிப்பது வழக்கம்" என்று விசாலம் அடுத்த வீட்டு அலமுவிடம் சொல்லுவது இந்த முறையைச் சேர்ந்தது. இதைப்போல வேறு சில விளம்பரங்கள்:

"போன வாரம் புதிதாகக் கார் வாங்கினேன் ஸார்! புத்தம் புதிய 'ஸ்டுடிபேகர்'! ரொக்கமாகப் பன்னிரண்டாயிரத்து ஐநூறு ரூபாய் கொடுத்தேன்."

"நான் இதுவரை நூல் புடவையே கட்டிக் கொண்டது கிடையாது, மாமி! இப்போதுதான் முதல் தடவையாகக் கட்டிக்கொள்கிறேன். பட்டுப் புடவை கட்டிக் கொண்டால்தான் எனக்கு மனசுக்கு ரொம்பத் திருப்தியாக இருக்கிறது."

"நான் சினிமா, டிராமாவுக்குப் போனால், முதல் வகுப்புக்குக் குறைந்து டிக்கெட் வாங்குவதில்லை, ஸார்!"

இத்தியாதி.

மறைமுகமான விளம்பர முறையைக் கையாளுபவர்களும் அநேகம் பேர் இருக்கிறார்கள்.

சில விளம்பரங்களை பார்த்திருப்பீர்கள். குதிரையின்மீது சிவாஜி ஆரோகணித்துச் செல்வதுபோல் ஒரு சித்திரம் வரையப்பட்டிருக்கும். அதன் கீழ் கொட்டை எழுத்துக்களில் 'மகாராஷ்ட்ர சாம்ராஜ்யத்தில்' என்று ஒரு விளம்பரம் ஆரம்பமாகும். அந்த விளம்பரம் முழுவதையும் படித்துக்கொண்டே வந்தால், கடைசியில் 'எங்கள் நரைமயிர் கறுக்கும் தைலம் பல தலைமுறைகளாகச் சிறந்ததாகக் கருதப்பட்டு வருகிறது' என்று எழுதியிருக்கும். இதுதான் 'மறைமுக முறை' எனப்படுவது.

சில மனிதர்களுக்குத் தங்களைப் பற்றித் தாங்களே நேரடியாக விளம்பரப்படுத்திக் கொள்வதற்குச் சங்கோசமாயும் அநாகரிகமாகவும் தோன்றும். ஆகவே அவர்கள் கொஞ்சம் சுற்று வழியான முறைகளை அனுஷ்டிப்பது வழக்கம். உதாரணமாக: "எனக்குக்கூட இஷ்டமில்லை. மூத்த பையன்தான் அடிக்கடி தொந்தரவு செய்தான். நானும் 'சரி' யென்று ஒப்புக்கொண்டு, பழைய காரைக் கொடுத்து விட்டு, புத்தம் புதிய கார் வாங்கி விட்டேன். விலை கூட அதிகம்தான். பையன் என்னவோ, 'பத்தாயிரம் ரூபாய் தானே, அப்பா! என்ன பிரமாதம்?' என்றான். நானும் இணங்க வேண்டியதாகி விட்டது!"

"நேற்று சாயங்காலம் டிபனுக்கு உப்புமா பண்ணினேன், மாமி! எங்க ரங்கன் அதைக் கண்ணால் கூடப் பார்க்கவில்லை. தினமும் நல்ல நல்ல 'ஸ்வீட்'டாகச் சாப்பிட்டு சாப்பிட்டு அவன் வழக்கம் கண்டு விட்டானோல்லியோ?"



இத்தியாதி. இன்னும் பற்பல ரகங்களில் விளம்பரம் கையாளப்படுகிறது. சமய

சந்தர்ப்பத்தைப் பொருத்தும், ஆசாமிகளைப் பொருத்தும் விளம்பரத்தின் ரூபம், தன்மை எல்லாம் மாறும்.

விட்டுக்கு இரண்டு விருந்தினர்கள் வந்திருக்கும் பொழுது, பெட்டிக்குள் மாதக் கணக்காகக் கிடக்கும் வெள்ளிக் கூஜாவையும், வெள்ளி டம்ளர்களையும் எடுத்து உபயோகிப்பது ஒருவகை விளம்பரம்.



''எனது குமாரத்தி சௌ. லக்ஷ்மிக்கும் சிரஞ்சீவி தங்கசாமிக்கும் நடந்த திருமணத்திற்கு வந்திருந்தவர்களுக்கும், வாழ்த்துச் செய்திகள் அனுப்பிய நண்பர்களுக்கும், அன்று மாலை நடந்த சங்கீதக் கச்சேரிக்கு விஜயம் செய்திருந்தவர்களுக்கும் எனது நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்'' என்று பத்திரிகைகளில் வெளியாகும் அறிக்கை, அந்தத் திருமண வைபவத்தை நேரில் பார்த்து அனுபவிக்காத ஆத்மாக்களுக்கு ஒரு விளம்பர அறிக்கை!

''அடேயப்பா, வர வர ரயிலில் இரண்டாம் வகுப்பில் சௌகரியமாகவே போக முடியாது போலிருக்கே, ஸார்! மூன்றாம் வகுப்பு தேவலை என்று தோன்றுகிறது.''

இது, தான் இரண்டாம் வகுப்பில்தான் பிரயாணம் செய்வது வழக்கம் என்பதை எடுத்துக் கூறும் விளம்பரம்.

இன்னும் இவை போன்ற ஆயிரக் கணக்கான விளம்பரங்கள்!

எனக் கென்னவோ விளம்பரத்தில் காஞ்சங்கூட ஆசையே இல்லை. நமது உண்மை மதிப்பு விளம்பரத்தின் மூலம் தானா வெளி யுலகிற்குத் தெரிய வேண்டும்? அதிகம்சொல்லப் போவானேன்?... நான் எவ்வளவு சிறந்த எழுத்தாளன் என்பதை நானே சொல்லிக் கொள்ள வேண்டுமா, என்ன?... எனது எழுத்துத் திறமைக்கு விளம்பரம் எதற்கு, ஸார்?

# பெயர் என்ன?

அது லாகூர் ரயில்வே ஸ்டேஷன். டில்லிக்குப் போகும் ரயில் புறப்படுவதற்கு இன்னும் இரண்டே இரண்டு நிமிஷந்தான் இருக்கிறது.

ஒரு கிழவர் அவசர அவசரமாக ஸ்டேஷனை நோக்கி ஓடிவந்தார். மூன்றாம் வகுப்பு வண்டிகள் எல்லாவற்றையும் பார்த்தார். இடமே இல்லை. அசாத்தியக் கூட்டம். ஒருவரை யொருவர் முட்டி மோதிக்கொண்டு நின்றுகொண்டிருந்தார்கள்.

இதோ, மணி அடிக்கப்போகிறது; வண்டியும் புறப்படப்போகிறது! பாவம், கிழவர் தனியாய்த் தவித்தார். அவர் அவசரமாக டில்லிக்குப் போகவேண்டும். இந்த வண்டியைத் தவற விட்டுவிட்டால், வேறு வண்டி கிடையாது. அப்புறம் நாளைக்குத்தான் போக முடியும்.

அவர் அவ்விதம் தவித்துக்கொண்டிருப்பதை ஒரு 'போர்ட்டர்' பார்த்தான்.

''சாமி, எனக்கு எட்டணாக் கொடுங்க. உங்களை எப்படியாவது வண்டியில் ஏற்றி விடுகிறேன்'' என்றான்.

''சரி'' என்றார் கிழவர்.

அவருடைய அவசரத்துக்கு எட்டணா ஒரு பிரமாதமா?

'போர்ட்டர்' கிழவரைக் கடைசி வண்டி ஒன்றுக்கு அழைத்துக்கொண்டு போய், அங்கே வாசலை அடைத்துக்கொண்டிருந்த சாமான்களோடு ஒரு சாமானாய்க் கிழவரையும் உள்ளே தள்ளிவிட்டு, கதவையும் பூட்டிக்கொண்டு போய்விட்டான்.

உட்காருவதற்கு இடமே இல்லை. கிழவர் வெகுநேரம் வரை நின்றுகொண்டே இருந்தார். மெலிந்த உடல். பிரயாணக் களைப்பு; அத்துடன் புகை, தூசி. வியர்வையோ, கொட்டிக் கொண்டிருந்தது. கிழவருக்குத் தலை சுற்றுவது போலிருந்தது.

அவருக்குப் பக்கத்தில் நின்றுகொண்டிருந்தவர்கள் பலர், சண்டைபோட்டு, ஒருவரை யொருவர் இடித்துத் தள்ளி எப்படியோ சௌகரியமாக உட்கார்ந்து கொண்டார்கள். சிலர் படுத்துக் குறட்டை விட்டுத் தூங்கினார்கள். ஆனால் கிழவர் வாய் திறக்கவே இல்லை.

இரண்டு மணி நேரம் கழிந்தது. வண்டியில் இருந்தவர்களுக்கு அந்தக் கிழவர்மீது அனுதாபமும் இரக்கமும் உண்டாயிற்று.

அவர்கள் அவரைப் பார்த்து, ''என்ன ஐயா, நீர் உட்காரக் கூடாதா?'' என்று கேட்டார்கள்.

''நான் என்ன செய்வது? இடம் இல்லையே!'' என்றார் கிழவர்.

அதற்குள், ஒரு மூலையிலிருந்து யாரோ ஒருவர், ''உம்முடைய பெயர் என்ன ஐயா?'' என்று அலட்சியமாகக் கேட்டார்.

கிழவர் சற்று நேரம் தயங்கினார். பிறகு, ''என் பெயர் மோகன தாஸ் காந்தி!'' என்றார்.

அவ்வளவுதான்: எல்லோரும் ஒரு கணம் சிலைபோல ஸ்தம்பித்துப் போய்விட்டார்கள். ஒரே நிசப்தம் குடிகொண்டது. பிறகு, எழுந்து, காந்திஜியிடம் மன்னிப்புக் கேட்டுக் கொண்டு, அவருக்கு வேண்டிய வசதி செய்து கொடுத்தார்கள்.

RDGD. No. M. 4392